Licensed to Post Without Pre-Payment Licence No G 6Γ N MS CPP 55 ANNA Leading Progressive Tamil Daily to the Peor

# நாட்டு ஒற்றுமை ஓங்க ஆர்.வி. வலியுறுத்தல்

Regd No. TN - MS [C] 24 420212 16 பக்கம் விலை 100 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 14 8 87 வெள்ளி வெளியூர் சனி 15 8 87 இதழ் 295

## குடியரசுத் தலைவரின் சுதந்திர தின விழாப் பேருரை

**புதுடெல்லி, ஆக. 14- நாட்டு ஒற்றுமை உணர்வு ஓங்க வேண்டும் என்று சுதந்திரதின விழாப் பேருரையில் ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன் கேட்டுக்கொண்டார்.**

நாற்பதாவது சுதந்திர தின விழாவை முன்னிட்டு ஜனாதிபதி ஆர் வெங்கட்ராமன் வானொலி தொலைக்காட்சியில் நாட்டு மக்களுக்குச் செய்தி விடுத்தார்.

அவரது உரை வருமாறு:

சுதந்திரப் போராட்டத்தின் போது இருந்த ஒற்றுமை நாட்டு உணர்வு ஓங்க வேண்டும். ஒற்றுமை உணர்வும், சட்டம் ஒழுங்கும் ஏற்பட்டு இனக் கலவரம், அரசியல் அதிரடிச் செயல் ஆகிய சவால்களை வெற்றிகரமாகச் சமாளிக்க வேண்டும்.

வன்செயல் காரணமாக முன்பு எப்போதும் இல்லாத வகையில் படுகொலைகள் நடப்பது வேதனைக்குரியது.

நாட்டுக்கு தேவைப்படுகிற நேரமெல்லாம் ஒற்றுமை ஒருமைப்பாடு உணர்வுகளை மேலோங்கச் செய்த பெருமை நம் மக்களுக்கு உண்டு அப்படிப்பட்ட அவசியம் இப்போது ஏற்பட்டுள்ளது.

### வறட்சி ஒழியட்டும்

நாட்டில முன்பு எப்போதும் ஏற்படாத வகையில் வறட்சி ஏற்பட்டுள்ளது விண்டிப்புகளைத் தவிர்த்து இயற்கை வளங்களைப் பேணிப் பயன்படுத்த அரசுடன் கைகோர்த்துப் பாடுபட வேண்டும்.

திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி தொழில் விவசாயம் கல்வி மருத்துவ விஞ்ஞான தொழில் நுட்ப வளர்ச்சி ஆகியவற்றில் நாடு போதிய வளர்ச்சி கண்டுள்ளது.

சுதந்திரம் பெறுவதில் வெற்றி கண்டுள்ளோம், நாட்டில் சுபிட்சத்தை ஏற்படுத்துவதிலும் வெற்றி பெறுவோம் வறுமையை விரட்ட நமது போராட்டம் தொடர வேண்டும்.

பட்டப்பகலில பகைவனை கிரணம் தீண்டுவதன் மூலம் இருள் பரவுவது போல், வகுப்புவாத வன்முறை அராஜகம் ஆகிய செயல்கள்

இடையூறு ஏற்படுத்தி கிறது எந்த தவறும் செய்யாத அப்பாவிகளை வன்முறையாளர்கள் கொல்கிறார்கள்.

இதனை ஒடுக்கும் அரசின் முயற்சிக்கு மக்கள் ஒத்துழைப்பை நல்க வேண்டும் சுதந்திர திருநாள் பாடுபட்டு அளப்பரிய தியாகங்களை செய்த செம்மல்களுக்கு நாம் நன்றிக் காணிக்கையாக்குவோம்.

இவ்வாறு ஜனாதிபதி ஆர் வெங்கட்ராமன் கூறினார்.

## எல்லைகாந்திக்கு பாரத ரத்னா விருதை ஆர் வி வழங்கினார்

புதுடெல்லி ஆக 14 எல்லைகாந்தி கான் அப்துல் கபார்கானுக்கு பாரதரத்னா விருதை ஜனாதிபதி ஆர் வெங்கட்ராமன் வழங்கினார்.

ஜனாதிபதி மாளிகையில் நடந்த நிகழ்ச்சியில இந்த விருதை எல்லை காந்தி சார்பில் அவரது மகன் வாலிகான் பெற்றுக்கொண்டார்.

நிகழ்ச்சியில் பிரதமர் ராஜீவ் மற்றும் மத்திய அமைச்சர்கள் பங்கேற்றனர்.

## புரட்சித்தலைவர் உற்சாகத்துடன் இருக்கிறார்



நியூயார்க் ஆக 14 நியூயார்க்கில மருத்துவ பரிசோதனை பெற்றுவரும் முதல்வர் புரட்சித்தலைவர் மிகுந்த உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் இருக்கிறார்.

நியூயார்க் புருக்ளின் மருத்துவமனையில் முதல்வர் புரட்சித் தலைவருக்கு டாக்டர் பிரிட்மென் மருத்துவ பரிசோதனைகளை நடத்தினார்.

முதல்வர் புரட்சித் தலைவரது தனிச் செயலாளர் பரமசிவம் தமிழ்நாடு தலைமை செயலாளர் பத்மநாபனிடம் தொலைபேசியில் கூறியதாவது —

முதல்வர் புரட்சித் தலைவர் நேற்று நன்கு ஓய்வு எடுத்துக் கொண்டார். மிகுந்த உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடன் இருக்கிறார் என்று பரமசிவம் தெரிவித்துள்ளார்.

## 4 லட்சம் செலவில் குடிநீர் திட்டம்

தருமபுரி, ஆக 14 தருமபுரி மாவட்டம் காரிமங்கலம் ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த பிதனஹள்ளி மற்றும் உச்சானஹள்ளியில் ரூபாய் 4.40 லட்சம் செலவில் அமைக்கப்பட்ட குடிநீர் திட்டத்தை உக்கம்சந்த் துவக்கிவைத்தார்.

விழாவுக்கு கிருஷ்ணகிரி சட்டமன்ற உறுப்பினர் கே. ஆர் சின்னராசு முன்னிலை வகித்தார்.

### விடுமுறை அறிவிப்பு

சுதந்திர தினத்தை முன்னிட்டு அண்ணா நாளிதழ் அலுவலகத்திற்கு நாளை [15ந்தேதி] விடுமுறையாகும். ஆகவே அடுத்த இதழ் சென்னையில் 16ந் தேதி மாலையும் வெளியூர்களில் 17ந்தேதி காலையும் வெளிவரும்.

## இன்றைய 'அண்ணா'

16 பக்கங்கள் விலை ரூ.1-

## வறட்சியை சமாளிக்க தீவிர நடவடிக்கை

புதுடெல்லி, ஆக 15 கிராமப் புறங்களில் உள்ள ஏழை எளிய மக்களுக்கு வேலைவாய்ப்பை உருவாக்கித் தந்து அவர்களின் உற்பத்தி பொருள்களின் விற்பனைக்கு உத்தரவாதம் செய்யப்படும் என்று பிரதமர் ராஜீவ்காந்தி கூறினார்.

வறட்சியை சமாளிக்க தீவிர நடவடிக்கை எடுக்கப்பட்டு வருவதாகவும் கூறினார்.

நாட்டின் 40வது சுதந்திர தின நிறைவை யொட்டி நாடாளு மன்றத்தின் விசேஷ கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் பிரதமர் ராஜீவ்காந்தி உரையாற்றினார்.

பிரதமர் ராஜீவ் காந்தி பேசுகையில் கூறியதாவது:

தீவிரவாதிகளின் வன்முறை முற்றிலும் மனிதனால் உருவாக்கப்பட்டுள்ள சவால் கோழைத்தனமான கொலையாளிகள் நமது நாட்டை பிணையாக வைத்திருக்க அனுமதிக்கப் போவதில்லை.

நாட்டின் பெரும் பகுதிகளை பீடித்துள்ள வறட்சி தேசத்தை எதிர் நோக்கியுள்ள மற்றொரு சக்திவாய்ந்த சவாலாகும் வறட்சி கடுமையாக இருந்தபோதிலும் நாம் தயாராக இருக்கிறோம் கிராமப்புற ஏழைகளுக்கு வேலைவாய்ப்பு குடிநீர் உணவு கிராமப்புற கைவினைஞர்களின் பொருட்களுக்கு மார்க்கெட் கால்நடைகளுக்கு தீவனம் ஆகியவற்றுக்கு உத்தரவாதம் செய்யப்படும்.

இவ்வாறு ராஜீவ்காந்தி உறுதி கூறினார்.

### கொள்ளை முயற்சி

சென்னை. ஆக 14- அசோக்நகர் 4வது அவின்யூவிலுள்ள ஆந்திரா வங்கியில் கொள்ளையிட முயன்றார். காவலர்களின் உஷார் நிலையைப் பார்த்து தொடர்ந்து அவர் தப்பி ஓடிவிட்டார்.

## விவசாயத்தொழிலாளர் வேலை வாய்ப்பிற்கு புதிய திட்டம்

### ராசாராம் தகவல்

சென்னை. ஆக 14 விவசாயத் தொழிலாளர்களின் வேலைக்கு உறுதி செய்யும் வகையில் புதிய சர்க்கரை ஆலைகளை அமைக்க புரட்சித் தலைவர் அரசு நடவடிக்கை எடுத்துள்ளதாக அமைச்சர் ராசாராம் தெரிவித்துள்ளார்,

அமைச்சர் ராசாராம் விடுத்துள்ள சுதந்திர தின வாழ்த்துச் செய்தியில் கூறியிருப்பதாவது:

சுதந்திரம் அடைந்து 40 ஆண்டுகள் உருண்டோடிவிட்டன புரட்சித் தலைவர் பொன்மனச் செம்மல் எம்.ஜி.ஆர் அவர்கள் சுதந்திரம் அடைந்த இந்த 40 ஆண்டுகளில் 10 ஆண்டுகால பொற்கால வாழ்வை தமிழ்ச் சமுதாயத்திற்கு உருவாக்கி கொடுத்திருக்கிறார்கள்.

அறிஞர் அண்ணா அவர்கள் "சமுதாயத்தின் ஒவ்வொரு தரப்பாருடைய நன்மையும் அவர்களது மகிழ்ச்சியுமே எங்கள் குறிக்கோள். இப்படி ஒவ்வொரு பகுதியினரும் மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்வதன் மூலம் சமூகம் முழுமைக்கும் மகிழ்ச்சியுடன் இருக்க வழிகோல வேண்டுமென்பதே எங்கள் குறிக்கோள்.

இந்தக் குறிக்கோளை நோக்கி பணியாற்றுவதில் இதுவரை நாங்கள் வெற்றி கண்டுள்ளோம் இனியும் வெற்றி காண்போம் என்று சூளுரைத்துத்தான் தமிழகத்தில் ஆட்சியை மாற்றி அமைத்தார்கள் அவர்களின் கொள்கையை பின்பற்றி புரட்சித் தலைவர் அவர்கள் கடந்த 10 ஆண்டு காலத்தில் ஏராளமான சாதனைகளை செய்திருப்பதை நாம் இன்று நினைவு கூறுவோம்.

தமிழகத்தை பொறுத்த வரையில் வறுமைக் கோட்டிற்கு கீழே வாழும் மக்களையும் நலிந்த பிரிவினரையும் ஒரு புரட்சிகரமான சமுதாய மாற்றத்தின் மூலமாக அவர்களை முன்னுக்கு கொண்டு வர வேண்டும் என்று திட்டமிட்டு தமிழக அரசு நடைமுறைப்படுத்தி வருகிறது. பொன்மனச் செம்மலின் ஆட்சியில் கடந்த பத்தாண்டு கால வரலாற்றைப் பார்ப்போமேயானால் தொழிலாளர்களுக்கு பல்வேறு நலத்திட்டங்கள் உருவாக்கப்பட்டு அதன் விளைவாக தொழிலாளர்கள் மத்தியில மனநிறைவும், அவசியமற்ற போராட்டங்கள் தவிர்க்கப்பட்டிருக்கும் தன்மையையும் நாடே கண்டு கொண்டிருக்கிறது. புதிய தொழில்கள் தமிழகத்திலே மலர வேண்டுமானால் தொழில் அமைதி இருந்தால்தான் நாட்டில் உள்ள அனைத்து தரப்பினரும் தமிழ்நாட்டில் புதிய தொழில்களைத் துவக்க முன்வருவார்கள் அந்த வகையில் பார்க்கும்போது தமிழகம் படிப்படியாக ஆனால் உறுதியாக முன்னேறிக் கொண்டு வருவதை நீங்கள் நன்கு உணர்வீர்கள்.

### மக்கள்தொகை

எவ்வளவு தான் திட்டங்கள் போட்டாலும் அந்தத் திட்டங்களையும் மீறி மக்கள் தொகை வளர்ந்து கொண்டே இருப்பதை நாடு கண்டு வருகிறது ஆனால் தமிழகத்தைப் பொறுத்த வரையில் கடந்த பல ஆண்டுகளாகவே மக்கள் நல்வாழ்வுத்துறை மக்கள் தொகை பெருகாத வகையில் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களை மேற்கொண்டு பல அற்புதமான சாதனைகளை நிகழ்த்தி வருவதை எல்லோரும் பாராட்டுவதை நாடு நன்கு அறியும்.

அதே போல ஒவ்வொரு துறையிலும் புரட்சிகரமான மாறுதல்களைக் கொண்டு வருவதிலே புரட்சித் தலைவருக்கு இணை அவரே தான கடந்த பத்தாண்டு காலத்தில் வறட்சியும் ஏற்பட்டிருக்கிறது வெள்ளமும் வந்திருக்கிறது இரண்டையும் திறம்பட சமாளித்து பட்டினிச் சாவுகள் ஏற்படாத ஒரு வரலாற்றுச் சிறப்பை உருவாக்கிய ஆட்சி அவரது ஆட்சி.

சில ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்ட நெருக்கடியில் வாங்கும் சக்தியே அறவே போய் விவசாயிகள் தத்தளித்த காலத்தில் புரட்சித்தலைவர் ஒரு நல்ல ஏற்பாட்டை செய்ததை அகில இந்தியாவும் பாராட்டியது.

ஆம் ஒருபக்கம் நெய்த துணி தேங்கிக்கிடந்தது நெசவாளர்களுக்குப் பிரச்சினை அதே நேரத்தில் வாங்கச்சக்தியற்ற விவசாயிகள் இரண்டு சாராருக்கும் உதவி செய்ய வேண்டும்

அப்போதுதான் உதித்தது விவசாயத் தொழிலாளர்களுக்கு வேட்டி-சேலை இலவசமாக வழங்கும் அற்புதமான திட்டம் பல மாநிலங்கள் அதைப் பின்பற்றிய காட்சியை நாடு இன்றைக்கு கண்டு கொண்டிருக்கிறது கிராமத்தில் இருக்கிற மக்கள் வேலைவாய்ப்பைத் தேடி நகரத்திற்கு வராத தன்மையை உருவாக்குவதற்கு பல்வேறு கிராம நல திட்டங்கள் உருவாக்கப்பட்டன.

இந்த ஆண்டு விவசாயத் துறையில் எவ்வளவோ சிரமங்களுக்கு இடையிலே தமிழகம் தன்னிறைவைப் பெற்று ஒரு சாதனையை காட்டியிருக்கிறது மழையின்மை ஒருபக்கம் வாட்டிக் கொண்டே இருக்கிறது அதே நேரத்தில் கரும்பு விவசாயிகள் அரும்பாடுபட்டு கரும்பை காப்பாற்றி ஆலைகளுக்கு கரும்பைத் தந்து கொண்டே இருக்கிறார்கள்.

### அன்னிய செலாவணி

எட்டு லட்சம் டன் சர்க்கரை உற்பத்தி செய்யப்பட்டு இந்தியாவின் அன்னிய செலாவணியை மீத்து தந்த பெருமையும் இன்றைய சர்க்கரை துறைக்கு உண்டு சென்ற ஆண்டு இந்தியா 225 கோடி ரூபாய்க்கு சர்க்கரையை இறக்குமதி செய்தது தமிழ்நாட்டிலே உள்ள அரசுத்துறையிலே இருக்கிற சர்க்கரை ஆலைகள் முனைந்து பணியாற்றியதன் விளைவாக சுமார் 52 கோடி ரூபாய் அளவிற்கு அன்னிய செலாவணியை மீதப்படுத்தி வரலாறு படைத்திருக்கிறது.

இந்த ஆண்டு மத்திய அரசு பல சர்க்கரை ஆலைகளை நிறுவ தமிழக அரசுக்கு அனுமதி வழங்கியிருக்கிறது புதிய ஆலைகள் தோன்றுவதன் காரணமாக மேலும் ஒரு லட்சம் ஏக்கர் கரும்பு பயிரிடப் போகிற நிலைமை தமிழ்நாட்டிலே உருவாகியிருக்கிறது கிராமங்களிலே இருக்கும் இலட்சக்கணக்கான விவசாயத் தொழிலாளர்கள் அன்றாடம் குறைந்தது 10 ரூபாய் கிடைக்கக்கூடிய நிலைமை உருவாக்கப்பட்டு இருக்கிறது தமிழகத்தை பொறுத்த வரையில் சுமார் 80 லட்சம் குழந்தைகளுக்கு மதிய உணவு போடப்படுவதாலே வறுமைக் கோட்டிற்கு கீழே உள்ளவர்கள் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்து கொண்டே போவதை நாடு கண்டு வருகிறது தனிநபர் வருமானம் உயர்ந்திருக்கிறது கிராம மக்களுக்கு நல்வாழ்வு அளிக்க மகாத்மா காந்தி அவர்கள் கதர்வாரியத்தை உருவாக்கினார்.

இந்தியாவிலே கதிர் உற்பத்தி செய்யப்படுவதும் கதர் விற்பனை செய்யப்படுவதும் தமிழகத்திலே தான் அதிகம் என்கிற நிலைமை இருக்கிறது.

புரட்சித் தலைவர் ஆட்சியில் தமிழக விவசாயத்துறையினை புரட்சிகரமாக மாற்றி அமைக்கவேண்டும் என்கிற எண்ணம் ஓங்கி வளர்ந்திருக்கிறது உலக வங்கியின் உதவியுடன் ஜப்பான் தாய்வான், டென்மார்க் போன்ற நாடுகளைப் போல சிறிய சக்திவாய்ந்த எந்திரக்கலப்பைகள் மில்லர்கள் ஆயிரத்திற்கு மேல வாங்கி தமிழகத்திலே இருக்கிற ஊராட்சி ஒன்றியங்களிலே ஏல் வாடகை முறையும் வைத்து சிறு விவசாயிகள் விதையை தெளிக்கவும், தண்ணீரை இறைக்கவும் போன்ற பல்வேறு காரியங்களுக்கு உதவி செய்யப்பட இருக்கிறது.

நமது நாடு செழிக்க நாட்டு மக்கள் நலம் பல பெற அனைவரும் அரசுக்கு ஒத்துழைப்பு நல்க வேண்டும் அதை நீங்கள் எல்லோரும் நினைவில் கொண்டு இந்த சுதந்திர தின நன்னாளில் புரட்சித் தலைவர் பொன்மனச் செம்மலின் கையிலே தந்து மகிழ்வீர்கள் என்று உறுதியாக நம்புகிறேன்.

இவ்வாறு அமைச்சர் ராசாராம் தெரிவித்துள்ளார்.

## ரீகன் உயிர்தப்பினார் அடையாளம்தெரியாத விமானம்மோதவந்தது

சாந்தாபார்பரா ஆக 14- அமெரிக்க ஜனாதிபதி ரீகன் சென்ற ஹெலிகாப்டரில் ஒரு மர்ம விமானம் மோத வந்தது மயிர்இழையில் உயிர் தப்பினார் ரீகன்.

ரீகன் தனது விசேஷ ஹெலிகாப்டரில் கலிபோர்னியா மாநிலம் சாந்தா பார்பரா என்ற மலை வாசஸ்தலத்திற்குச் சென்றார்.

ஹெலிகாப்டர் இறங்குகிற நேரத்தில் எதிரே ஒரு மர்ம விமானம் 'திடீர்' என்று வந்தது.

ரீகனின் ஹெலிகாப்டரை ஓட்டிய விமானி சாமர்த்தியமாக விமானத்தைத் திருப்பித் தரையிறக்கினார்.

பயங்கர விபத்து தவிர்க்கப்பட்டது ரீகன் உயிர் தப்பினார்.

மோத வந்த விமானம் தரையிறங்காமல் அப்படியே மேலே கிளம்பியது உடனே மற்ற பாதுகாப்பு ஹெலிகாப்டர்கள் பறந்து சென்று மோத வந்த விமானத்தை துரத்தி தரை இறக்கியது அந்த விமானஓட்டி கைது செய்யப்பட்டார்.

## ஈழ உடன்பாடு: பிரதமர் திருப்தி

புதுடெல்லி. ஆக 14— இந்திய, இலங்கை உடன்பாடு செயல்படும் விதம் திருப்தியாக இருக்கிறது என்று பிரதமர் ராஜீவ் காந்தி கூறினார்.

எல்லைகாந்தி கான் அப்துல் கபார்கானுக்கு பாரத ரத்னா விருது வழங்கும் விழா டெல்லியில் நடந்தது விழா முடிந்த பின் பிரதமர் ராஜீவ் காந்தி நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார் அப்போது அவர் கூறியதாவது:-

இந்திய-இலங்கை உடன்பாடு திருப்திகரமாக செயல்படுகிறது.

அதை செயல்படுத்துகிற நேரத்தில் ஏற்படுகிற இன்னல்கள் இடையூறுகளை சமாளித்து விடலாம்.

உடன்பாடு சரியாக செயல்படுகிறது சில பிரச்சினைகள் உள்ளன. அவை எதிர்பார்க்கப் பட்டவை தான் அவற்றைச் சமாளித்துவிடலாம்.

இவ்வாறு பிரதமர் ராஜீவ் கூறினார்.

# ஈழத்தமிழர்களுக்கு இனியவாழ்வு [2]

# காணாதன கண்டோம்

சுதுமலை அம்மன் கோவில் முன்பு நின்று பார்த்த போது கண்ணுக்கு எட்டிய தூரம் வரை மக்கள் வெள்ளம்தான்!

இந்தியா இலங்கை ஒப்பந்தத்தின்படி உடனடியாக செய்ய வேண்டியது போராளிகள் தங்கள் ஆயுதங்களை ஒப்படைக்கும் பணியாகும்.

அதுபற்றி சுதுமலைப் பொதுக் கூட்டத்தில் உள்நாட்டு-வெளிநாட்டுப் பத்திரிகையாளர்கள் மத்தியில் விடுதலைப் புலிகள் இயக்கம் அறிவிக்கப்போகிறது என்பதால்தான் இத்தனை பெரிய கூட்டம். விடுதலைப் புலிகள் ஆயுதத்தை ஒப்படைக்க கடைசி நிமிடத்தில் மறுத்துவிடக்கூடுமோ என கேள்விக்குறிகள் சிலர் மனதில் எழத்தான் செய்தன.

அந்த பிரமாண்டமான பொதுக் கூட்டத்தை இளம் விடுதலைப் புலிகள் கண்காணித்துக் கொண்டிருந்தார்கள். வலியுறுத்தல் இல்லாமல் வலிய வந்து கட்டுப்பாடு காத்தனர் ஈழத் தமிழ் மக்கள்!

அண்ணாந்து பார்த்தால் தான் தெரியும் என்கிற அளவுக்கு உயரமான மேடை! மாரி அம்மன் கோபுரமும் தளபதிகள் அமர்ந்திருந்த மேடையையும் ஒரே ஏற்றக் கோணத்தில் பார்க்க வேண்டியிருந்தது. நம் நாட்டில் பிரதமருக்கு சிறிய அளவில் தனி பாணியில் உயரமாக மேடை அமைக்கிறார்களே அப்படித்தான் இருந்தது.

மேடையில் ஏறும் வழியில் விடுதலைப்புலிகள் காவல்காத்து நின்றனர். மேடையிலிருந்த புலிகள் இயக்கத் தலைவர் பிரபாகரனுக்கும் இதர தளபதிகளுக்கும் பாதுகாப்பு அளிப்பதில் அந்த பதின்மூன்று பதினான்கு வயதான விடுதலைப்புலிகள் எடுத்துக் கொண்ட அக்கறை இருக்கிறதே... அடேயப்பா... எங்கே பயிற்சி பெற்றார்கள்? ஸ்காட்லாந்த் யார்டிடம் கூட இவ்வளவு இளம் சிப்பாய்கள் இருக்கமாட்டார்களே.

மேடைக்கு வந்து பல வேறு வட்டார விடுதலைப் புலிகள் இயக்கத் தளபதிகள் பேசினார்கள்.

கூட்டம் ஆர்வத்தோடு கேட்டது. ஒவ்வொரு தளபதியும் தங்கள் தங்கள் பகுதிகளில் நடந்த யுத்தத்தைப் பற்றியே அதிகம் பேசினர். சிங்களப் படையை எதிர்த்துப் போராடிய விதம், ராணுவத்திடம் சிக்கிய புலிகள் விஷம் சாப்பிட்டு தற்கொலை செய்து கொண்டது போன்ற விபரங்கள் அனைத்தையும் எடுத்துரைத்தனர். பாரதப்போர் உபன்யாசம் கேட்கிற மாதிரி இருந்தது.

இறுதியில் 'விடுதலைப்புலி இயக்கத் தலைவர் வேலுப்பிள்ளை பிரபாகரன் என்ன முடிவு எடுக்கிறாரோ அதை அப்படியே ஏற்போம்' என்றனர்.

-:அ. பொ. நாராயணன்:-

இப்படி ஒவ்வொரு தளபதிகளும் "பிரபா.. முடிவை ஏற்பதாக அறிவித்தனர். அரசியல்வாதிகளின் மேடை மாதிரி அல்லாமல்... நறுக்குத் தெரித்த மாதிரி கருத்தரங்கம் போன்று அது அமைந்தது. ஏழு நிமிடத்திற்கு மேல் எவரும் பேசவில்லை. குண்டுவீச்சில் காலிழந்த தளபதி கிட்டுவும் பத்து நிமிடம் தான் பேசினார். கூட்டத்தினர் உற்சாகத்துடன் வாக்கியத்துக்கு வாக்கியம் கைதட்டினர்.

இறுதியில் பிரபாகரன் பேசினார்.

முன் வரிசையில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் நிருபர்கள் அமர்ந்திருந்தனர். விடுதலைப் புலிகள் இயக்கத்தை ஆதரிக்கும் தாய்மார்கள் 'ஒப்புக்காக இப்படி எழுதினாலும் அந்தப் பெண்களுக்கும் பதினைந்து பதினாறு வயதுதான் இருக்கும். பத்திரிகையாளர்களுக்குக் குளிர்பானங்களையும் நொறுக்குத் தீனியையும் சப்ளை செய்து கொண்டிருந்தனர்.

தமிழகத்திலிருந்து வந்திருக்கிறோம் என்று தெரிவித்ததும் பாசமழை பொழிந்தனர். ஒவ்வொருவரையும் 'நீங்கள் எந்தப் பத்திரிகை' என்று அந்த சின்னஞ்சிறு சகோதரிகள் அன்புடன் வினவினர். சொன்னோம்! ஓகோ அப்படி ஒரு பத்திரிகையா என்று தான் அவர்கள் கூறினார்கள். புரட்சித் தலைவர் பெயரைச் சொன்னதும் பூரிப்போடு தலையாட்டினர்.

புரட்சித் தலைவரைப் பற்றி அந்த செந்தமிழ்ச் செல்வங்கள் பேசிய கருத்துக்களைச் சொன்னால் மிகைப்படுத்தியதாக இருக்கும்.

'நாங்க இப்ப நிம்மதியா கூட்டம் போட்டோமென்றால் அதுக்கு எம் ஜி ஆர் தான் காரணமாம், என்று அந்த மக்கள் கூறினர்.

போர் ஓயும் வகையில் உடன்பாடு ஏற்பட்டதில் அங்குள்ள தமிழர்களுக்கு ஏக ஆனந்தம்!

இந்த வட்டாரத்திலுள்ள சுதுமலைப் பகுதி மக்கள் வாழ்க்கைக்கு பாதிப்போ விவசாயம் பண்ணுறாங்க... மீன் பிடிக்கிறதை தொழிலா வச்சிருக்கவங்க பாதிப்போ என்று சொன்னார் பின்னால் அமர்ந்திருந்த பெரியவர்.

திடீரென ஒரே கைதட்டல். மேடையைப் பார்த்தபோது இறுதியாக பிரபாகரன் பேச எழுந்து கொண்டிருந்தார். அவர் எழுந்து மைக் முன் நின்றபோது அவரது முதுபுறத்தைத் தவிர மற்ற மூன்று பகுதிகளையும் துப்பாக்கி ஏந்திய விடுதலைப்புலிகள் பாதுகாத்து நின்றனர்.

பேசவில்லை! படித்தார். பேச்சை ஏற்கனவே தயாரித்து வைத்திருந்தார். உடன்பாடு ஏற்பட்ட விவரத்தையும் அதை ஏற்றுக்கொள்ள வேண்டியதன் அவசியத்தையும் அவர் கூறினார்.

விடுதலைப் புலிகள் ஆயுதங்களை ஒப்படைப்போம் என்று பிரபாகரன் அறிவித்தார்.

துப்பாக்கி தூக்கி நின்ற புலிகள் "உம்" என்றிருந்தனர்.

கூட்டம் முடிவுற்றது மாலை 5.15 தான்! அனைவரும் அப்படியே இருங்கள். தலைவரும் தளபதிகளும் சென்றபின் நீங்கள் செல்லலாம். நமது தலைவரின் பாதுகாப்பு முக்கியம்' என்று மைக்கில் அறிவிக்கப்பட்டது. கூட்டம் அப்படியே அமர்ந்திருந்தது.

பலத்த பாதுகாப்புடன் பிரபாகரனும் கிட்டுவும் மற்றவர்களும் வேனில் ஏறிச் சென்றனர். கூட்டம் அமைதியாகத் [illegible]

பத்திரிகையாளர்கள் பல்வேறு தரப்பினருடனும் பேசவாய்ப்பு ஏற்பட்டது.

விடுதலைப்புலிகள் எங்கும் நிறைந்திருந்தனர். ஆயுதங்களை ஒப்படைக்கப் போகிறீர்களே தலைவா என்று சில புலிகளிடம் கேட்டபோது தலைவர் சொல்லிட்டார் நாங்க ஒப்படைச்சிருவோம். அந்த நோக்கு துப்பாக்கி எங்களுக்கு உயிர்பாதி என்றனர் உருக்கமாக.

எப்படியோ...... சண்டை முடிந்து சமாதானம் வருது நிம்மதியா நாங்க வாழலாம் என்று அங்கு நின்ற முதியவர்கள் திருப்தியுடன் கூறினர். கூட்டத்திற்கு வந்திருந்த நமது ராணுவ வீரர்களைப் பார்த்து கூட்டத்தினர் கையசைப்பதும் வணக்கம் போடுவதும் புல்லரிக்கும் நிகழ்ச்சிகள் நடந்தன.

பெருவாரியாக தமிழ் தெரிந்த சிப்பாய்களே அங்கு இருந்தனர். சீக்கியத் தொண்டர் ஈழத்தமிழர்களின் அன்பைக் கண்டு கையசைத்து கொண்டிருந்[தனர்]

(தொடரும்)





## போலீசார் மோதல்: 4 பேர் சுட்டுக்கொலை

ஜலந்தர் ஆக. 14] போலீசாருக்குள் ஏற்பட்ட மோதல் காரணமாக 4 போலீசார் சுட்டு கொலை செய்யப்பட்டனர்.

ஜலந்தரிலிருந்து வெளிவரும் "அகாலி பத்ரிகா" என்ற இதழின் ஆசிரியர் ராதமேஷ்சிங் சோக். பயங்கரவாதிகளிடமிருந்து பாதுகாப்பு கொடுப்பதற்காக அவர் வீட்டில் பலத்த போலீஸ் பாதுகாப்பு போடப்பட்டிருந்தது.

### காரணம் என்ன?

அந்த வீட்டின் முன் பாதுகாப்புக்கு நின்றிருந்த போலீசார் பல்ஜித்சிங் பிரேம்லால், சுரேந்தர்சிங் மற்றும் மெய்க்காவலர் மக்கான்சிங், ஆகியோரும் துப்பாக்கியால் சுடப்பட்டு குண்டு காயங்களுடன் இறந்து கிடந்தனர்.

காவலர்களுக்குள் ஏற்பட்ட மோதலால் இந்த சம்பவம் நடந்திருக்கலாம் என்று தெரிகிறது. சம்பவம் நடந்த இடத்துக்கு அருகே காலி பீர் பாட்டில்கள் கிடந்தன. குடிபோதையில் ஏற்பட்ட சண்டையால் இந்த விபரீதம் நடந்திருப்பதாக கூறப்படுகிறது.

மற்றும் ஒரு தலைமை காவலரையும் ஒரு போலீஸ்காரரையும் காணவில்லை.

## சென்னை மாநகராட்சியில் சுதந்திர தின விழா

சென்னை, ஆக 14 சென்னை மாநகராட்சி சார்பில் 40வது சுதந்திர தின விழா மிகச்சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

சுதந்திர தின விழாவில் 1000 சாரண, சாரணியர் பங்கேற்கின்றனர்.

சாரணர் அணிவகுப்பை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் நேரு விளையாட்டு அரங்கில் பார்வையிடுகிறார்.

அந்த விழாவில் 10வது 12வது வகுப்பில் அதிக மதிப்பெண் பெற்ற தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த மாணவ மாணவியருக்கு ரூபாய் 200 வீதம் ஜேப்பியார் வழங்குகிறார்.

## பிரதமரின் வெளிநாடு பயணம் ஒத்திவைப்பு

புதுடெல்லி ஆக 14 ஜெர்மன் கூட்டாட்சி குடியரசு ஹங்கேரி யூகோஸ்லாவியா ஆகிய நாடுகளில் ஆகஸ்டு 24ந் தேதி முதல் பிரதமர் ராஜீவ் சுற்றுப்பயணம் செய்வார் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. நாட்டின் பல பகுதிகளிலுள்ள வறட்சி நிலைமையை உத்தேசித்து பிரதமர் தனது வெளிநாட்டு சுற்றுப்பயணத்தை ஒத்திவைத்துள்ளார்.

## புதுவை கவர்னர் தமிழில் கையெழுத்து

புதுவை ஆக 14 புதுவை கவர்னர் டி பி திவாரி விடுத்துள்ள சுதந்திர தின வாழ்த்துச் செய்தியை தமிழில் கையெழுத்திட்டுள்ளார்.

## சுதந்திர தின சிறப்பு தபால்தலை வெளியீடு

புதுடெல்லி ஆக 14 நாடு விடுதலைபெற்ற 40-வது ஆண்டு சுதந்திர தின விழாவை யொட்டி அஞ்சல்துறை பலவண்ண சிறப்பு அஞ்சல் தலையொன்றை வெளியிடும் புதுடெல்லியில் நடைபெறவுள்ள சிறப்பு நிகழ்ச்சி ஒன்றில் பிரதமர் ராஜீவ்காந்தி இந்த அஞ்சல் தலையை வெளியிடுவார்.

சமூக ஒருங்கிணைப்பு, தேசிய ஒருமைப்பாடு சமூகநீதி ஆகியவை குறித்து மக்களிடையே புத்துணர்ச்சியை ஏற்படுத்துவதற்காகவும். விடுதலைப் போராட்டம் உணர்த்திய பல்வேறு உன்னத கருத்துக்களை மக்கள் புரிந்து கொள்ளும் விதத்திலும் விடுதலையடைந்த 40வது ஆண்டு பெருமை பெற்று மிளிர்கிறது.

60 காசு விலையுள்ள இந்த அஞ்சல்தலை தேசிய ஒருமைப்பாட்டையும் ஒற்றுமையையும் விளக்கும் வகையில் தேசியக் கொடியை சித்தரிக்கிறது காலத்தைக் குறிப்பதற்காக 40 என்ற எழுத்துக்கள் ஏழு பறவைகளுடனும் தேசிய வண்ணங்களில் சித்தரிக்கப்பட்டிருக்கும் முதல் நாள் உறையும் தகவல் தாளும் அனைத்து அஞ்சல் சேகரிப்பு அலுவலகங்களிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட அஞ்சல் அலுவலகங்களிலும் ஒரு ரூபாய்க்கும் கிடைக்கும்.

## மராட்டிய அரசு அலுவலகங்களில் சிகரெட் குடிக்க தடை

பம்பாய், ஆக. 13- மராட்டிய மாநிலங்களில் உள்ள எல்லா அரசு அலுவலகங்களிலும் புகை பிடிக்க தடை விதிக்கப்பட்டுள்ளது

அரசு சார்புடைய அலுவலகங்களிலும் இந்த தடை விதிக்கப்படுகிறது

புகை பிடிப்பது துப்புவது போன்ற செயல்களுக்கு தடை விதிக்கப்பட்டுள்ளன

அரசு அலுவலகங்களில் வைக்கப்பட்டு இருந்த "ஆஷ்டிரேக்களும்" அகற்றப்பட்டுள்ளன

சிகரெட் பிடிப்பதால் புற்றுநோய் வருவதாக கருதப்படுவதால் இந்த தடை விதிக்கப்பட்டுள்ளது

## அரசு அதிகாரி வீட்டில் திருட்டு

சென்னை. ஆக 14 அரசு உள்துறை துணைச் செயலாளராக பணிபுரிபவர் அய்யாசாமி இவரது இல்லத்தில் திருடிய இருவர் கைது செய்யப்பட்டனர்

கீழ்ப்பாக்கம் செக்ரட்டிரியேட் காலனியில் குடியிருப்பவர் அதிகாரி அய்யாசாமி

இவரது வீட்டில் திருடிய உசேன் [வயது27] அமீர் ஜான் [வயது54] ஆகிய இருவரையும் அயனாவரம இன்ஸ்பெக்டர் கோபால கிருஷ்ணன் கைது செய்தார்

பிடிபட்ட இருவரும் நகரில் பல இடங்களில் ரூபாய் 2 லட்சம் பெறுமானமுள்ள பொருட்களை திருடியதாக விசாரணையில் தெரிய வந்தது

## செங்கற்பட்டில் சுதந்திர தினவிழா ஊர்வலம்

செங்கற்பட்டு. ஆக 14- செங்கற்பட்டில் 40வது சுதந்திரதின விழா மிகச் சிறப்பாக கொண்டாடப்பட்டது,

சுதந்திர தின விழாவை யொட்டி மாணவ மாணவியர் 6000 பேர் பங்கேற்ற மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது

ஊர்வலத்தை மாவட்ட ஆட்சித் தலைவர் பி. பாண்டியன் துவக்கிவைத்தார்.

விழாவில் தமிழ்நாடு குழாய்க்கிணறு வாரியத் தலைவர் கொளத்தூர் கோதண்டம் முன்னாள்

# இலங்கையில் இந்தியராணுவம் நீடிப்பது அவசியம்: ஆலடி அருணா பேச்சு

புதுடெல்லி ஆக. 14 இலங்கையில் இந்திய ராணுவம் நீடித்திருக்க வேண்டும் என்று நாடாளுமன்ற மாநிலங்களவையில் கழக உறுப்பினர் ஆலடி அருணா வலியுறுத்தினார்

இலங்கையில் உள்ள இந்திய சமாதானப் படையைப்பற்றி மாநிலங்களவையில் ஆலடி அருணா அளித்த சிறப்புக்குறிப்பின் மீது பேசியதாவது:-

இலங்கை குடியரசுத் தலைவர் ஜெயவர்த்தனே "டைம்ஸ்" பத்திரிகைக்கு அளித்தபேட்டியில் இப்போது உள்ள போர் நிறுத்தம் பின்பற்றப்பட்டால், இந்திய சமாதானப்படை ஆகஸ்ட் 20-ம் தேதி இலங்கையிலிருந்து வெளியேறலாம் என்று கூறி இருக்கிறார் இந்திய சமாதானப்படை இலங்கையிலிருந்து வெளியே வந்தால் எந்த நோக்கத்திற்காக ஒப்பந்தம் செய்யப்பட்டதோ அந்த நோக்கமே சிதைந்து விடும்

ஜெயவர்த்தனே அழைப்பின்பேரில் அனுப்பப்பட்ட இந்திய சமாதானப்படை; போராளிகள் ஆயுதங்களை ஒப்படைப்பதை கண்காணிப்பதற்காக மட்டும் செல்லவில்லை தமிழர்களின் அமைதிக்கும், பாதுகாப்பிற்கும் உத்தரவாதம் அளிக்க சென்றிருக்கிறது

இலங்கைத் தமிழர்களின் உரிமை, அமைதி, பாதுகாப்பு காப்பாற்றப்பட வேண்டும் என்பதற்காகத் தான் அனைத்து போராளிகளின் குழுக்களும் ஒப்பந்தத்தை மதித்து ஆயுதங்களை ஒப்படைத்தன

ஒப்பந்தத்தின் பெரும் பகுதி இன்னும் அமலாக்கப்படவில்லை இப்போது தான் அமலாக்கும் பணி துவங்கி உள்ளது நமது சமாதானப் படையை நாம் திரும்ப பெற்றாலோ அல்லது இலங்கை அரசு திருப்பி அனுப்பி வைத்தாலோ ஈழத் தமிழர்களின் வாழ்வு-உரிமைக்கு பேராபத்து நேர்ந்திடும்

இந்திய-இலங்கை ஒப்பந்தத்தின் எல்லா அம்சங்களும் நிறைவேற்றப்படும் வரை சமாதானப் படை இலங்கையில் இருப்பது தவிர்க்க முடியாதது

ஆயுதங்களை ஒப்படைக்கும் பொழுது பிரபாகரன் சொன்னதை நினைவுபடுத்த விரும்புகிறேன். ஆயுதங்களை போராளிகள் ஒப்படைப்பதன்மூலம், ஈழத்தமிழர்களை காக்கும் தங்களின் பொறுப்புக்களை இந்திய சமாதானப் படைக்கு மாற்றிக் கொடுப்பதாகக் கூறினார் எனவே இந்திய சமாதானப் படை தமிழர்களைக் காப்பாற்றுவதற்கு மட்டுமின்றி ஜெயவர்த்தனேயையும் அவரது அரசையும் காப்பாற்ற இலங்கையில் இருந்தாக வேண்டும்

இவ்வாறு ஆலடி அருணா கூறினார்



# பிரதமர் ராஜீவுடன் டெலிபோனில் பேச பி பி சி தரும் வாய்ப்பு

புதுடெல்லி, ஆக 14 இந்தியாவின் 40 வது சுதந்திர தின ஆண்டு விழாவை யொட்டி பிரதமர் ராஜீவ் காந்தியுடன் விசேஷடெலிபோன் பேட்டிக்கு பி பி சி (பிரிட்டிஷ் பிராட்காஸ்டிங் சிஸ்டம்) ஏற்பாடு செய்துள்ளது

வரும் 16ந்தேதி இரவு 7.15 மணிக்கு இந்தவிசேஷ டெலிபோன் பேட்டி நேரடியாக ஒலிபரப்பாகும் கடந்த 40 ஆண்டுகளில் இந்தியாவின் வளர்ச்சியைப் பற்றி நீங்கள் ராஜீவ்காந்தியிடம் கேள்விகள் கேட்கலாம் நீங்கள் கேட்க உள்ள கேள்விகளை பற்றி பி பி சியிடம் முன்னதாக தெரிவித்துவிட வேண்டும்

உங்களுடைய கேள்வி தேர்ந்தெடுக்கப்பட்டால் நிகழ்ச்சி ஒலிபரப்பாகும் நேரத்தில் உங்களை பி பி சி டெலிபோனில் அழைக்கும் உடனே நீங்கள் பிரதமர் ராஜீவ் காந்தியுடன் போனில் நேரடியாக பேசலாம் நீங்கள் கேட்கும் கேள்வியும் ராஜீவின் பதிலும் வானொலியில் நேரடியாக ஒலிபரப்பாகும் இதற்காக நீங்கள் லண்டன் பி பி சி, யுடன் தொடர்பு கொள்ள வேண்டிய தொலை பேசி எண்; 5804411.



# தஞ்சை பகுதியில் பரவலாக மழை: விவசாயிகள் மகிழ்ச்சி

தஞ்சை ஆக 14 தஞ்சை மாவட்டத்தில் பல இடங்களில் பலத்த மழை பெய்துள்ளதால் விவசாயிகள் மகிழ்ச்சியடைந்துள்ளனர்

இந்த மழை அங்குள்ள பயிருக்கு மிகவும் உதவியாக இருக்கும் என்று கருதப்படுகிறது

தஞ்சை மாவட்டத்தில் உள்ள மூத்துப்பேட்டையில் அதிகபட்சமாக 115 மில்லிமீட்டர் மழை பெய்துள்ளது

மதுக்கூரில் 93 மில்லி மீட்டர் கீழ் அணையில் 72 மில்லி மீட்டர். மன்னார்குடி நன்னிலம் ஆகிய இடங்களில் தலா 72 மில்லி மீட்டர், தஞ்சை நகரம் கொள்ளிடம் ஆகிய இடங்களில் 21 மில்லி மீட்டர் மயிலாடுதுறையில் 3 மில்லி மீட்டர் மழையும் பெய்துள்ளது,

இந்த மழையால் 50 ஆயிரம் ஏக்கர் குறுவை பயிரும் 18 ஆயிரம் ஏக்கர் நிலக்கடலை பயிரும் பயன் பெறும்

மேட்டூர் அணையில் 307 அடி தண்ணீர் உள்ளது அணைக்கு 3700 கன அடி வீதம் தண்ணீர் வருகிறது

### திருச்சி

திருச்சி மாவட்டத்தில் அரியலூரில் 49 மில்லிமீட்டரும். ஜெயம்கொண்டத்தில் 36 மில்லி மீட்டரும் பெரம்பலூரில் 20 மில்லி மீட்டரும் நந்தியாரில் 3 மில்லிமீட்டரும் திருச்சி நகரில் 20 மில்லி மீட்டரும் நேற்றுகாலை வரை மழை பெய்துள்ளது.

தென் ஆற்காடு மாவட்டம் பண்ருட்டியில் 79 மில்லி மீட்டரும் கடலூரில் 50 மில்லி மீட்டரும் காட்டுமன்னார் கோயிலில் 48 மில்லி மீட்டரும், சிதம்பரம் திட்டக்குடி ஆகிய இடங்களில் 26 மில்லி மீட்டரும். விழுப்புரத்தில் 20 மில்லி மீட்டரும் மழை பெய்துள்ளது

புதுக்கோட்டை மாவட்டம அறந்தாங்கியில் 68 மில்லி மீட்டர் கரூரில் 42 மில்லி மீட்டரும் மியான் மலையில் 53 மில்லி மீட்டரும் கீழ அணைக்கோட்டையில் 78 மில்லிமீட்டரும் விராலி மலையில் 54 மில்லி மீட்டரும் மழைபெய்துள்ளது

மதுரையில் பெரியார் அணை மதுரை மேலூர், ஆண்டிபட்டி மேட்டுப்பட்டி ஆகிய இடங்களில் லேசான மழை பெய்துள்ளது

கோவையில் 56 மில்லி மீட்டரும் கூனூரில் 52 மில்லி மீட்டரும். நாகப்பட்டினத்தில் 39 மில்லி மீட்டரும், பாம்பனில் 17 மில்லிமீட்டரும் சேலத்தில் 11 மில்லிமீட்டரும் திருப்பத்தூரில் 15 மில்லி மீட்டரும் மழை பெய்துள்ளது.

சென்னை நகரில் இன்று அதிகாலை 5 மில்லி மீட்டருடன் மீனம்பாக்கத்தில் 11 மில்லி மீட்டரும் மழை பெய்துள்ளது.

தமிழ்நாட்டில் இந்த நிலையில் அதிகமாக இதுவரை சேலத்தில் தான் மழை பெய்துள்ளது சேலத்தில் இதுவரை 310 மில்லி மீட்டர் மழை பெய்துள்ளது

# சட்டசபை- நீதி மன்றம் கடும்மோதல்

ஐதராபாத், ஆக. 14- ஆந்திர சட்டசபையும் நீதிமன்றமும் மோதிக் கொண்டுள்ளன

மலக்பேட்டை என்ற இடத்தில் ஒரு வர்த்தகக் கூடம் கட்ட ஏற்பாடு நடக்கிறது இந்த நிறுவனத்தில் மத்தியதொழில் அமைச்சர் வெங்கல்ராவும் ஒரு பங்குதாரர் அந்த நிறுவனம் கட்ட ஒரு ஏக்கர் நிலம் தேவைப்பட்டது இதற்கு நகாபுற நில உச்சவரம்புச் சட்டத்திலிருந்து விலக்கு அளிக்கப்பட்டுள்ளது இதைத் தொடர்ந்து புகார்கள் கூறப்பட்டன,

இது குறித்து விசாரிக்க சட்டசபைக் குழு ஒன்று அமைக்கப்பட்டது.

இந்தவிவகாரம் நீதிமன்றம் சென்றது அந்த சட்டமன்றக் குழு செயல்பட ஆந்திர உயர் நீதி மன்றம் இடைக்காலத் தடை விதித்தது

இப்பிரச்சினை சட்டசபையில் எழுப்பப்பட்டது

இந்த இடைக்காலத் தடையைபொருட்படுத்தக் கூடாது என்று சட்ட சபையில் எல்லா கட்சி உறுப்பினர்களும் சபாநாயகரைக் கேட்டுக் கொண்டனர்

சட்டசபை விவகாரத்தைத் தடுத்து நிறுத்த உயர் நீதிமன்றம் முயன்றிருக்கிறது என்று சபாநாயகர் ஜி நாராயணராவ் கூறினார்,

உடனே முதல்வர் என் டி ராமராவ் ஆவேசமாக எழுந்தார். "சட்டசபை உரிமையைக் காப்பாற்றுங்கள் என்று ஜனாதிபதியை கேட்டுக் கொண்டு இப்போதே தீர்மானம் கொண்டுவரப்போகிறேன் என்றார்,

பதட்டப்பட்டார்கள் உரிமையைப் பாதுகாக்க சட்டசபைக்கே அதிகாரம் இருக்கிறது தீர்மானம் வேண்டியதில்லை என்று எதிர்க்கட்சி உறுப்பினர்கள் ராமராவிடம் கூறினர்.

அப்படியா? அப்படியென்றால் ஜனாதிபதியைக்கேட்டுக்கொள்ளும் தீர்மானம் வேண்டியதில்லை என்று தானே திருப்தி அடைந்து அமர்ந்தார் ராமராவ்.

சட்டமன்ற விவகாரத்தில் தலையிட்டு அதிகாரத்தைப் பறிக்கிறது உயர்நீதி மன்றம் என்று வருவாய்த்துறை அமைச்சர் சீனிவாசலுரெட்டி கூறினார்.

## திடீர் வெள்ளம்: 12 பேர் சாவு

சிம்லா. ஆக. 14- சிம்லா பகுதியில் பலத்த மழை பெய்தது மழைமேக வெடிப்பால் ஒரே இடத்தில் மழை கொட்டியதால் வெள்ளம் ஏற்பட்டு 12பேர் இறந்தனர்

## சரணாலயம் பெயர் மாற்றம்

கோவை ஆக. 14 ஆனமலை வனவிலங்கு சரணாலயத்திற்கு இந்திராகாந்தியின் பெயர் சூட்டப்பட்டுள்ளது இத்தகவலை சரணாலய அதிகாரி பத்மநாபன் தெரிவித்தார்

## சிறைகைதிகள் தொழில் துவங்க வங்கி கடன்

சென்னை, ஆக. 14- சிறைக்கைதிகளாக இருந்து விடுதலைஅடைய இருப்பவர்களுக்குதொழில் தொடங்க இந்தியன் வங்கி முதன்முதலாக கடனுதவி வழங்குகிறது

இம்மாதம் விடுதலைப் பெற இருக்கும் 40 சிறைகைதிகளுக்கு தலா ரூபாய் 5 ஆயிரம வரை கடன் வழங்கப்படுகிறது

40வது சுதந்திர நாளை யொட்டி இந்த திட்டத்தை அமல்படுத்துகிறார்கள்.

இந்த விழாவில் இந்தியன் வங்கி தலைவர் எம் ஜி கே நாயர் மத்தியசிறை சூப்பிரண்டு டி ஜே தாஸ ஆகியோர் பங்கேற்கிறார்கள்

# திமுக.சேர்மன்அராஜகம்: கழகம்- காங். கண்டனம்

சேலம் ஆக 14— சேலம் சூரமங்கலம் நகராட்சிதலைவரின் அராஜகம் அதிகரித்துள்ளது இதைத்தொடர்ந்துகழகம் காங்கிரஸ் கவுன்சிலர்கள் உண்ணாவிரதப் போராட்டம் நடத்தினர்.

சேலத்தை அடுத்த சூரமங்கலம் நகராட்சி தலைவர் காவேரி திமுகவைச்சேர்ந்தவர்

கடந்த 7ந்தேதி சூரமங்கலம் நகராட்சி அலுவலகத்திற்கு சென்று ஆணையாளர் அறையின் கதவை உடைத்தாராம் கோப்புகளை திருடமுயன்றாராம்

நகராட்சி அலுவலகப் பணியாளர்களை வெளியே துரத்தி சட்டத்துக்குபுறம்பாக அலுவலகத்தைபூட்டி சீல் வைத்தார்

இதனால் மக்கள் நலப் பணிகள் ஸ்தம்பித்து விட்டன

இப்படிப்பட்ட அராஜகங்களில் ஈடுபட்ட திமுக சேர்மனை டிஸ்மிஸ் செய்ய வேண்டும் என்ற கோரிக்கை எழுந்துள்ளது

கழகம்மற்றும்காங்கிரஸ் கவுன்சிலர்கள் திமுக சேர்மன் காவேரியை டிஸ்மிஸ் செய்ய வலியுறுத்தி காலவரம்பின்றி உண்ணாவிரதம் இருக்கிறார்கள்

மைசூர் ஆனூர்ஜெகதீசன் மற்றும் மாவட்ட கல்வி அதிகாரி மாவட்ட ஆட்சித்தலைவரின் நேர்முக உதவியாளர் சிவராமகிருஷ்ணன் மக்கள் தொடர்பு அதிகாரி ஜீ மணிக்குமார் ஆகியோர் கலந்துகொண்டனர்,



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D M K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road. MADRAS-600029.

## நகராட்சி நிர்வாகம் மற்றும் குடிநீர் வழங்கும் துறை

வாய்மையே வெல்லும்

அரசாணை [நிலை] எண் 796

நாள் 12-8-87

நகராட்சி நிர்வாகம் மற்றும் குடிநீர் வழங்கும் துறை நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6 ஆம் பிரிவின் கீழான கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காகக் கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு அந்நிலங்களுக்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டுத் தொகை முழுவதும் தமிழ்நாடு குடிநீர் வாரியம் தன் கட்டுப்பாட்டிலுள்ள அதனால் நிருவகிக்கப்பட்டு வரும் தன் நிதியிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது. ஆகவே 1894 ஆம் ஆண்டைய நிலம் கையகப் படுத்துதல் சட்டத்தின் (மையச் சட்டம் 1-1894) 16 ஆம் பிரிவின்படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 5.19.0 ஹெக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக, அதாவது பூமியில் தண்ணீர் குழாய் அமைத்து உலக வங்கியின் நிதி உதவியின் கீழ் சேலம் நகரம் 11 நகரங்கள் மற்றும் 264 கிராமங்களுக்கு குடிநீர் வழங்கும் திட்டப் பணிக்காக தேவைப்படுகின்றன என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்கள் வரைபடங்கள் சேலம் குடிநீர் வழங்கும் திட்டத்தனி தாசில்தார் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன. அவற்றை அலுவலகப்பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

### விவர அட்டவணை

மாவட்டம்: சேலம் வட்டம் மேட்டூர்

கிராம எண் 13:-13 பொன்னேரி நல்லாகவுண்டம்பட்டி

| [illegible] | [illegible] | கையகப்படுத்த உள்ள பரப்பளவு | [illegible] |
|---|---|---|---|
| புன்செய் 278-4பி | கருப்ப கவுண்டர் மனைவி பொன்னம்மாள் | 0.13.5 | பயிரிடத்தக்கது பலன் தென்னை 3 |
| புன்செய் 277-4சி2 | தொப்ப கவுண்டர் மகன் நல்லப்பன் | 0.22.0 | பயிரிடத்தக்கது இளம் தென்னை-3 |
| புன்செய் 279-1ஏ2பி | ராமசாமி கவுண்டர் மகன் வெங்கடாசலம் | 0.18.5 | பயிரிடத்தக்கது இளம் தென்னை-4 பலன்பனை 1 |
| புன்செய் 283-1பி | கொளந்தையப்ப கவுண்டர் மகன் கொமரப்ப கவுண்டர் | 0.12.5 | பயிரிடத்தக்கது. |
| புன்செய் 283-2பி | வெங்கடாசலம் மனைவி தங்கம்மாள் | 0.11.0 | பயிரிடத்தக்கது பலன் தென்னை 2 |
| புன்செய் 281-1ஏ2 | கருப்பண்ணகவுண்டர் மகன் பொன்னுசாமி | 0.06.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 281-1பி2 | கருப்பண்ணகவுண்டர் மகன் செங்கோட்டையன் | 0.06.0 | ,, |
| புன்செய் 281-2பி | சிட்டா [எ] நல்லா கவுண்டர் மகன் சங்கர கவுண்டர் | 0.08.0 | ,, |
| புன்செய் 2 2-1பி | கொமரசாமி மனைவி நாச்சியம்மாள் | 0.01.0 | ,, |
| புன்செய் 271-4பி | ராமசாமி மகன் சின்னப்பன் | 0.10.0 | பலன் பனை 25 |
| புன்செய் 217-1பி | குஞ்சப்பரெட்டி மகன் நாகப்பன் | 0.12.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 271-2பி | குஞ்சிரெட்டி மகன் கிருஷ்ணன் | 0.07.0 | பயிரிடத்தக்கது பலன் பனை |
| புன்செய் 270-2பி | கந்தசாமி மகன் கொமரசாமி | 0.27.0 | பயிரிடத்தக்கது பலன் பனை 1 இளம் பனை-6 |
| புன்செய் 149-1பி | சுப்ரமணியன் மக்கள் சிவபிரகாசம் 1 லோகநாதன் 2 செல்வி 3 சுப்பிரமணியன் மனைவி காளியம்மாள் 4 | 0.20.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 151-1ஏ2 | கந்தசாமி கவுண்டர் மகன் குப்புசாமி | 0.16.5 | பலன் பனை-1 இளம் |
| புன்செய் 150-1பி2 | கந்தசாமி மகன் குப்புசாமி 1 இ சுப்பிரமணியம் மக்கள் சிவபிரகாசம் 2 லோகநாதன் 3, செல்வி 4 சுப்பிரமணியம் மனைவி காளியம்மாள் 5 | 0.08.5 | பனை 1 பயிரிடத்தக்கது |
| புன்செய் 163-1ஏ2 | ராசப்பகவுண்டர் மகன் ராஜமாணிக்கம் | 0.03.0 | பலன் தென்னை 4 |
| புன்செய் 163-1பி2 | கந்தசாமி கவுண்டர் மகன் குப்புசாமி | 0.13.0 | பலன் தென்னை 15 இளம் தென்னை 2 |
| புன்செய் 144-2ஏ2 | முத்தப்பகவுண்டர் மகன் சின்னப்ப கவுண்டர் | 0.10.0 | பயிரிடத்தக்கது இளம் பனை |
| புன்செய் 144-2பி2 | நல்லப்ப கவுண்டர் மகன் செங்கோட்டையன் | 0.04.5 | இளம் தென்னை 1 |
| புன்செய் 144-3பி2 | நல்லப்ப கவுண்டர் மகன் செங்கோட்டையன் | 0.21.5 | பயிரிடத்தக்கது. |
| புன்செய் 144-3சி1 | ராசப்ப கவுண்டர் மகன் மணி | 0.02.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 144-3டி2 | ராசப்ப கவுண்டர் மகன் மணி, நல்லப்பகவுண்டர் மகன் செங்கோட்டையன் | 0.01.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 141-2பி | முத்தப்ப கவுண்டர் மகன் சின்னப்ப கவுண்டர் | 0.26.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 141-3ஏ1 | முத்தப்ப கவுண்டர் மகன் சின்னப்ப கவுண்டர் | 0.01.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 141-3பி | நல்லப்பகவுண்டர் மகன் செங்கோட்டையன்-2 | 0.01.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 137-1ஏ2 | வேலப்பகவுண்டர் மகன் நல்லுசாமி | 0.26.5 | பலன் தென்னை 2 |
| புன்செய் 137-1பி1 | சின்னப்ப கவுண்டர் மகன் பொடரா கவுண்டர் | 0.05.5 | பலன் பனை-1 |
| புன்செய் 911-1பி | செங்கோடன் மகன் வெங்கடாசலம் | 0.09.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 124-3பி2 | சின்னுச்சாமி கவுண்டர் மகன் மணியன் | 0.00.5 | பயிரிடத்தக்கது. |
| புன்செய் 124-5பி | சின்னுசாமி கவுண்டர் மகன் பெருமாள் | 0.04.0 | பயிரிடத்தக்கது. |
| புன்செய் 124-14பி | சின்னசாமி கவுண்டர் மகன் சின்னப்பன் | 0.08.5 | பயிரிடத்தக்கது பலன்பனை 2 இளம் பனை-2 |
| புன்செய் 124-15பி | சின்னசாமி கவுண்டர் மகன் பெருமாள் | 0.05.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 124-16பி | சின்னசாமி கவுண்டர் மகன் சின்னப் | 0.05.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 124-17பி | சின்னுசாமி கவுண்டர் மகன் பெருமாள் | 0.25.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 126-2 | வள்ளியண்ண செட்டி மகன் கண்டியண்ணசெட்டி | 0.25.5 | பயிரிடத்தக்கது பலன் பனை-2 |
| புன்செய் 55-15பி | பெருமாள் கவுண்டர் மகன் வெங்கடாசலம் | 0.02.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 55-21பி | பெருமாள் கவுண்டர் மகன் ராமு | 0.03.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 55-22 | பெருமாள் கவுண்டர் மகன் மாதையன் | 0.03.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 55-23 | பெருமாள் கவுண்டர் மகன் கோவிந்தன் | 0.03.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 53-2பி | ராமசாமி மகன் கிருஷ்ணன் | 0.20.0 | பயிரிடத்தக்கது. |
| புன்செய் 53-3பி | வெங்கடாசலம் மனைவி சின்னபிள்ளை அம்மாள் | 0.15.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 45-1பி2 | பச்சியண்ணன் மனைவி வைரக்காள் | 0.06.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 29-2பி | பச்சியண்ணன் மனைவி வைரக்காள் சின்னதாயி 1 | 0.15.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 30-2பி | சின்னப்ப கவுண்டர் மனைவி சின்னப்ப கவுண்டர் மக்கள் திம்மராயன் 2 கிருஷ்ணன் 3, ராமசாமி 4. | 0.24.0 | பயிரிடத்தக்கது கூரை வீடு-1 களம்-1 |
| புன்செய் 28-1ஏ | அம்மாசி 1. குப்புசாமி 2 சின்னு கவுண்டர் 3. குப்புசாமி 4 சின்னப்பன் 5 இ சே சின்னு கவுண்டர் 6 மாதம்மாள் 7 பார்வதி 8. கொளந்தை 9. | 0.00.5 | பயிரிடத்தக்கது பலன் பனை-1 |
| புன்செய் 31-2இ2 | பெரியண்ணன் மகன் கோபாலன் | 0.01.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 32-2 | முத்து கவுண்டர் மகன் செல்லப்பன் | 0.22.0 | பயிரிடத்தக்கது பலன் தென்னை 1 இளம் பனை 1 கிணறு பாகம் 1 |
| புன்செய் 33-2பி2 | இருசாக்கவுண்டர் மகன் சின்னதம்பி | 0.03.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 33-2டி2 | இருசாக்கவுண்டர் மகன் சின்னப்பன் | 0.19.5 | பயிரிடத்தக்கது பலன் தென்னை 3 |
| | மொத்த பரப்பளவு | 5.19.0 | ஹெக்டேர் |

வி. அ. செபமலை
அரசு துணைச் செயலாளர்

செய்தி 363 - ஜூலை 87 - [illegible]

# விண்வெளியில் கோழிப்பண்ணை
# சோவியத் ரஷ்யா ஏற்பாடு

மாஸ்கோ, ஆக. 14- நீண்டகால விண்வெளிப் பயணங்களை மேற்கொள்ளும் விண்வெளி வீரர்களின் உணவுத் தேவைக்காக விண்வெளியில் அமைப்பதற்கு ஏற்ற கோழிப் பண்ணை ஒன்றை மாஸ்கோவில் உள்ள விமானப்பயிற்சிக் கல்லூரி மாணவர்கள் உருவாக்கியுள்ளனர்.

இந்தக் கோழிப்பண்ணை விண்வெளியில் வலம்வரும் ஆய்வுக்கூடங்களில் அமைக்கப்படும்.

செயற்கை முறையில் குஞ்சு பொரிப்பதற்கான அமைப்பு இரண்டு அறைகளைக் கொண்டதாக இருக்கும். முதல் அறையில் கோழி முட்டைகள் 20 நாட்கள் வைக்கப்பட்டிருக்கும். புவியீர்ப்பு மண்டலம் இந்த அறையில் உருவாக்கப்பட்டிருக்கும்.

ஒரு கோழியின் கால்களைப்போன்ற ஸ்பிரிங் அமைப்பு ஒன்று அந்த முட்டைகள் வைக்கப்பட்டிருக்கும் நிலையை மாற்றி அமைத்துக் கொண்டிருக்கும். 21-ம் நாள் அந்த முட்டைகள் இரண்டாவது அறைக்கு மாற்றப்பட்டு குஞ்சு பொரிக்கப்படும். இந்த செயற்கை முறை குஞ்சு பொரிக்கும் அமைப்பில் 13 கோழி முட்டைகளை குஞ்சு பொரிக்கச் செய்யலாம்.

பின்னர் கோழிக் குஞ்சுகள் ரப்பர் சுவரால் ஆன தனித்தனி அறைகளில் வளர்க்கப்படும். புவிஈர்ப்புத் தன்மை இல்லாத நிலையில் கோழிக் குஞ்சுகள் வசிப்பதற்கு ஏற்ற வாறு இந்த அறைகள் அமைக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு அறையிலும் கோழிக் குஞ்சுகளின் உணவுக்கும், குடிநீருக்கும் வசதி செய்யப்பட்டுள்ளது.

இந்த குஞ்சு பொரிக்கும் நிலையம் தற்போது வெற்றிகரமாக பரிசோதனைக் கூடத்தில் சோதனை செய்து பார்க்கப்பட்டுள்ளது.

900 கோழிக் குஞ்சுகள் இவ்வாறு பொரிக்கப்பட்டுள்ளன. இந்த கோழிக் குஞ்சுகள் சுவையாக இருப்பதாக பயிற்சி கல்லூரி மாணவர்கள் கூறுகிறார்கள். விரைவில் அடுத்த பரிசோதனை விண்வெளியில் நடைபெறும்.

## முதல்வருக்கு அரசு அலுவலர் கழகம் பாராட்டு

சென்னை, ஆக. 14- தமிழக அரசில் அடித்தள ஊழியர்களாக பணிபுரியும் அலுவலக உதவியாளர்கள் இருபது ஆண்டுகள் பணி முடித்தால் அவர்களுக்கு ரூபாய் 505-10-555-15-615-20-795-25-845 என்ற ஊதிய விகிதத்தில் ஊதியம் வழங்க ஆணையிட்டுள்ள தமிழக அரசிற்கும் தமிழக முதல்வர் புரட்சித் தலைவருக்கும் நிதியமைச்சர் டாக்டர் நாவலருக்கும் தமிழ்நாடு அரசு அலுவலர் கழகம் தனது இதயம் கனிந்த நன்றியினை தெரிவித்துக் கொள்வதாக அதன் தலைவர் கீ. க. மோகன் கூறியுள்ளார்.

## புரட்சித்தலைவர் நீடூழி வாழ மகளிர் அணி பிரார்த்தனை

சென்னை ஆக. 14- முதல்வர் புரட்சித் தலைவர் நீடூழி வாழ மதுரை மகளிர் அணியைச் சேர்ந்த ஏ. டி. துர்க்கா (43 வது வட்டம், 5 வது வட்ட) ஆர்சி அமிர்த வள்ளி ஆகியோர் திருச்சி சமயபுரம் மாரியம்மன் ஆலயத்தில் தீச்சட்டி எடுத்து வழிபட்டார்கள்.

## ரூ. 80 ஆயிரம் திருட்டு: இருவர் கைது

சென்னை, ஆக. 14- புதுப்பேட்டையைச் சேர்ந்தவர் வியாபாரி வில்லியம்ஸ் இவர் மோட்டார் சைக்கிளில் சென்ற போது அதில் இருந்த ரூபாய் 80 ஆயிரத்தை திருடியதாக சேகர் (வயது 23) சுப்பிரமணி [23] இருவரையும் யானைக்கவுனி போலீஸ் இன்ஸ்பெக்டர் செல்வராசு கைது செய்தார்.



# நகராட்சி நிர்வாகம் மற்றும் குடிநீர் வழங்கும் துறை

அரசாணை (நிலை) எண் 779

நாள் 5 8 87

## அறிவிக்கை

நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6 ஆம் பிரிவின் கீழான கீழ்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காக கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு அந்நிலங்களுக்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டு தொகைமுழுவதும் தமிழ்நாடு குடிநீர் வாரியம் தன் கட்டுப்பாட்டிலுள்ள அதனால் நிருவகிக்கப்பட்டு வரும் தன் நிதியிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் அவ்வாசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது ஆகவே 1894 ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் மையச்சட்டம் 1 1894 6 ஆம் பிரிவின் படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 7 20 ப ஹெக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது பூமியில் தண்ணீர் குழாய் அமைத்து உலக வங்கியின் நிதி உதவியின் கீழ் சேலம் நகரப 11நகரங்கள் மற்றும் 264கிராமங்களுக்கு குடிநீர் வழங்கும்திட்ட ப்பணிக்காக தேவைப்படுகின்றன என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்கள் வரைபடங்கள் சேலம் குடிநீர் வழங்கும் திட்டத்தனி தாசில்தார் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன அவற்றை அலுவலகப்பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

### விவர அட்டவணை

மாவட்டம்: சேலம் வட்டம்: மேட்டூர்

கிராம எண்: 38 குட்டப்பட்டி

| நன்செய் அல்லது புன்செய் என்றும் நில அளவைப் புல எண்ணும் | நிலச் சொந்தக்காரர் (பட்டாதாரர்) அல்லது அனுபவதாரர் பெயர் | கையகப்படுத்த உள்ள பரப்பளவு | நிலம் அல்லது பயிர் நிலத்திற்கா? மரங்கள் கட்டடங்கள் இவை ஏதேனும் குறிப்பிடவும் |
|---|---|---|---|
| புன்செய் 343-2பி | செம்மலை கவுண்டர் மகன் மாரப்பன் | 0.15 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 344-3பி | வரத படையாச்சி மகன் ஆறுமுகம் | 0 02 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 344-4பி | ராம படையாச்சி மகன் ரங்க படையாச்சி | 0 20.0 | பயிரிடத்தக்கது பலன் பனை 4 கூரைவீடு 1 |
| புன்செய் 344-5பி | ராம படையாச்சி மகன் மொட்டையன் | 0,24.5 | பயிரிடத்தக்கது வேப்பு 1 |
| புன்செய் 344 6ஏ | பெருமாள் மனைவி பாக்கியம் | 0.00.5 | பயிரிடத்தக்கது. பலன் பனை 2 |
| புன்செய் 346-1ஏ2 | சின்னப்ப கவுண்டர் மகன் லட்சுமண கவுண்டர் | 0.02,0 | பயிரிடத்தக்கது. |
| புன்செய் 346 1பி2 | நல்லப்பகவுண்டர் மகள் சென்னியப்பன் 1) சின்னப்ப கவுண்டர் (2) | 00.8 5 | பயிரிடத்தக்கது கருவேல மரம்-1 |
| புன்செய் 346-2ஏ2 | ராமசாமி படையாச்சி மகன் வெங்கடாசலம் | 0,14 0 | பயிரிடத்தக்கது வேம்பு 1 கூரைவீடு |
| புன்செய் 346-2பி1 | மாரிமுத்து பொன்னுசாமி மக்கள் 1 சின்னராசு 2 வரதராசு 3 பொன்னுசாமி மனைவி சின்னம்மாள் 4. | 0.03.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 339-2பி | சின்னப்ப கவுண்டர் மகன் லட்சுமண கவுண்டர் | 0.06 5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 347-4ஏ2 | தேவண்ண கவுண்டர் மனைவி அங்கம்மாள் | 0.00.5 | பயிரிடத்தக்கது. |
| புன்செய் 347-4பி2 | சின்னப்ப கவுண்டர் மகன் லட்சுமண கவுண்டர் | 0.05.0 | பயிரிடத்தக்கது பலன் தென்னை 2 இளம் தென்னை 9 |
| புன்செய் 347-4சி2 | சின்னப்பகவுண்டர் மகன் செங்கப்பன் | 0 04.0 | பயிரிடத்தக்கது பலன் தென்னை 7 இளம் தென்னை 3 |
| புன்செய் 347 4எப்2 | நல்லப்பகவுண்டர் மக்கள் சென்னியப்பன (1) சின்னப்ப கவுண்டர் 2 | 0.11 0 | பயிரிடத்தக்கது பலன் தென்னை இளம் தென்னை 19 |
| புன்செய் 347-5ஏ1 | சின்னப்ப கவுண்டர் மகன் லட்சுமண கவுண்டர் | 0.03 0 | பயிரிடத்தக்கது பலன் பனை இளம் தென்னை 14 |
| புன்செய் 347 5பி1 | சின்னப்ப கவுண்டர் மகன் செங்கப்ப கவுண்டர் | 0.02:5 | பயிரிடத்தக்கது பலன் தென்னை 8 இளம் தென்னை பலன் பனை இளம் பனை |
| புன்செய் 347 7ஏ | முத்துகிருஷ்ணன் படையாச்சி மகன் சின்னுடையாச்சி | 0 01 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 348 1பி | நாச்சியப்ப கவுண்டர் மகன் செல்லப்பன் 1. செல்லப்பன் மகன் முத்துசாமி 2 முத்துசாமி மகன் பழனிசாமி 3 | 0 30 0 | பயிரிடத்தக்கது பலன் பனை 2 இளம் பனை 3 கருவேல மரம் 1 |
| புன்செய் 350-1ஏ | பொன்னுசாமிபடையாச்சி மக்கள் மாரி 1 வரதன் 2 கோவிந்தன் 3 துரைசாமி மகன் நடேசன் 4 கஞ்சமலை மகள் அண்ணாமலை5 தங்கராசு ஜெயமணி 7 மன்னியராசு 8. கஞ்சமலை மனைவி அலமேலு 9 அர்த்தனாரி மனைவி சின்னம்மாள் 10. | 0 15 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 385-2பி | நாச்சியப்ப கவுண்டர் மகன் செல்லப்பன் 1 செல்லப்பன் மகன் முத்துசாமி 2 முத்துசாமி மகன் பழனிசாமி 3 | 0 12.5 | பயிரிடத்தக்கது வேப்பு 1 |
| புன்செய் 386 1பி | நாகப்ப கவுண்டர் மகன் கந்தசாமி கவுண்டர் | 0.32 5 | பயிரிடத்தக்கது பலன் பனை-4 இளம் பனை-7 வேம்பு 2 புரச மரம்-3 |
| புன்செய் 391-2எல்2 | செலம்ப கவுண்டர் மகன் முத்துசாமி கவுண்டர் | 0.03.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 392 1ஏ | சந்திரன் மகன் தனபாலன் | 0,05 5 | பயிரிடத்தக்கது இளம் பனை 1 ஆய மரம் 1 புரச மரம் 2 |
| புன்செய் 392 2பி | பழனியப்ப கவுண்டர் மகன் சந்திரன் | 0 14.5 | பயிரிடத்தக்கது பலன் பனை 2 |
| புன்செய் 394-1ஏ1 | கொமரப்ப கவுண்டர் மகன் சின்னப்பன் | 0 02 0 | பயிரிடத்தக்கது இளம் தென்னை-1 பலன் பனை-3 இளம் பனை 3 |
| புன்செய் 395-1எஸ்2 | செலம்ப கவுண்டர் மகன் முத்துசாமி | 0 05.0 | பயிரிடத்தக்கது இளம் பனை-1 |
| புன்செய் 395-2பி2 | கொமரப்ப கவுண்டர் மகன் சின்னப்பன் | 0,14 0 | பயிரிடத்தக்கது இளம் தென்னை 10. இளம் பனை 1 ஆய மரம்-1. கொய்யா மரம் 3 |
| புன்செய் 395-2சி1பி | கருப்பண்ண கவுண்டர் மகன் பொங்கியண்ணன் | 0.05,5 | பயிரிடத்தக்கது இளம் தென்னை 3 |
| புன்செய் 395-2சி2பி | கருப்பண்ண கவுண்டர் மகன் நாச்சியப்பன் | 0.06.0 | பயிரிடத்தக்கது பலன் பனை 2 |
| புன்செய் 395-2சி1ஏ | கருப்பண்ண கவுண்டர் மகன் பொங்கியண்ணன் | 0'03.5 | பயிரிடத்தக்கது பலன் பனை 5 இளம்பனை 1 |
| புன்செய் 400-1பி | அருள்மிகு வைத்தியநாதஸ்வரன் கோவில் | 0 08 5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 400 5பி | கருப்பண்ண கவுண்டர் மகன் நாச்சியப்பன் | 0.02 5 | ,, |
| புன்செய் 400-6ஏ2 | கொமரப்ப கவுண்டர் மகன் கருப்பண்ண கவுண்டர் | 0 05 5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 400 6பி1 | கொமரப்ப கவுண்டர் மகன சின்னப்பன் | 0 01,5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 403 1பி2 | கொமரப்ப கவுண்டர் மகன் சின்னப்பன் | 0 10 0 | பயிரிடத்தக்கது பலன் பனை 1 |
| புன்செய் 403 1சி2 | கருப்பண்ணகவுண்டர் மகன் பொங்கியண்ணன் | 0 03 5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 403 2ஏ2 | கொமரப்ப கவுண்டர் மகன் கருப்பண்ண கவுண்டர் | 0,03.5 | பயிரிடத்தக்கது பலன் தென்னை 2 இளம் தென்னை 5 பலன்பனை 1 |
| புன்செய் 403-2பி2 | பழனியப்ப கவுண்டர் மகன் ராமசாமி | 0 17 0 | பயிரிடத்தக்கது இளம் பனை 1 இளம் தென்னை 3 |
| புன்செய் 403 2சி1 | கொமரப்ப கவுண்டர் மகன் சின்னப்பன் | 0,01 5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 402 1எ2 | கொமரப்ப கவுண்டர் மகன் கருப்பண்ண கவுண்டர் | 0. 16 0 | பயிரிடத்தக்கது பலன் தென்னை பலன் பனை 8 கருவேல் மரம் 1 |
| புன்செய் 411-2பி2 | கந்தப்ப கவுண்டர் மகன் சென்னியப்பன் | 0,19 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 426 1இ1 | நந்தி கவுண்டர் மகன் கந்தசாமி | 0 01.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 412-1ஏ2 | சரவணப்பன் மக்கள் கந்தசாமி (1) பழனியப்பன் (2) சின்னப்பன் (3) கூட்டுறவு நிலவள வங்கி மேச்சேரி கிளை (4) [அடமானம்] | 0.24 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 412 1பி2 | -do- | 0 01,0 | -do- |
| புன்செய் 413 11பி2 | குப்ப கவுண்டர் மனைவி மாரக்காள் 1. குப்பகவுண்டர் மகன் மாணிக்கம் 2. | 0.02 0 | பயிரிடத்தக்கது. பலன் தென்னை 4 இளம் தென்னை 4 சிமெண்டு பைப்லைன் (130 அடி நீளம்) |
| புன்செய் 413 12ஏ2 | குள்ளப்ப கவுண்டர் மகன் சின்னகுழந்தை கவுண்டர் | 0.01,0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 413 12பி | குள்ளப்பகவுண்டர் 2 மகன் சின்ன குழந்தை கவுண்டர் | 0,10.0 | பயிரிடத்தக்கது பலன் பனை 3 |
| புன்செய் 413 12சி2 | பொன்னப்பகவுண்டர் மகன் ராஜமுத்து | 0 05.0 | பயிரிடத்தக்கது இளம் பனை 1 |
| புன்செய் 413 12டி1 | ஆனந்தன் மகன் பூபதி 1 ராமன் மனைவி செல்லம்மாள் 2 கிருஷ்ணன் மனைவி கூலச்சி 3 குள்ளப்ப கவுண்டர் மகன் பெரிய குழந்தை 4 | 0.01.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 413-12இ1 | குள்ளப்ப கவுண்டர் மகன் பெரிய குழந்தை கவுண்டர் | 0,01.0 | பயிரிடத்தக்கது இளம் பனை-1 |
| புன்செய் 413 12எப்1 | குள்ளப்ப கவுண்டர் மகன் ஆண்டி கவுண்டர் | 0'14.0 | பயிரிடத்தக்கது பலன் பனை 1 கருவேல் மரம் 1 வேம்பு 1 |
| புன்செய் 413-12ஜி1 | ஆனந்தகன் மகன் பூபதி (1) ராமன் மனைவி செல்லம்மாள் (2 கிருஷ்ணன் மனைவி கூலச்சி (3) குள்ளப்ப கவுண்டர் மகன் பெரியகுழந்தை (4) | 0'04'5 | பயிரிடத்தக்கது பலன் பனை 1 |
| புன்செய் 422-4பி | மாதையன் [எ] மசயன மகன் அய்யண்ண கவுண்டர் | 0 00.5 | பயிரிடத்தக்கது பலன் தென்னை-2 |
| புன்செய் 422-பி5 | மாதையன் [எ] மசயன் மகன் அய்யண்ண கவுண்டர் | 0.03.0 | பயிரிடத்தக்கது பலன் தென்னை-2 இளம் தென்னை-5 |
| புன்செய் 422-6ஏ2 | குப்ப கவுண்டர் மனைவி மாரக்காள் 1 குப்பகவுண்டர் மகன மாணிக்கம் 2 | 0,12 0 | பயிரிடத்தக்கது பலன் தென்னை-10 இளம் தென்னை-3 பலன்பனை-4 சிமெண்ட் பைப் லைன் நீளம் 35 அடி |
| புன்செய் 422-6பி1 | இருகாசகவுண்டர் மகன் சதாசிவம் | 0 02.0 | பயிரிடத்தக்கது பலன் தென்னை-1 இளம் தென்னை 5 |
| புன்செய் 422-1ஏ | குப்ப கவுண்டர் மனைவி மாரக்காள் 1 குப்பகவுண்டர் மகன் மாணிக்கம் 2 | 0,00,5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 422 9ஏ2 | எல்லப்ப ரெட்டி மகன் போடி ரெட்டி | 0 13 5 | பயிரிடத்தக்கது பலன் பனை 5 இளம் தென்னை 20 |
| புன்செய் 501-1ஏ1 | தூங்கன் (எ) எறப்ப ரெட்டி மகன போடிரெட்டி | 0,01.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 501 1பி2 | ஆரிமுத்து மகன் அய்யண்ண கவுண்டர் | 0.08 5 | பயிரிடத்தக்கது பலன் பனை 4 |
| புன்செய் 501 1சி1 | தூங்கன் எ. எறப்ப செட்டி மகன் ராஜமாணிக்கம் | 0.00.5 | பயிரிடத்தக்கது பலன் பனை 2 |
| புன்செய் 420 1பி2 | ராஜமுத்து மனைவி பாஞ்சாலி | 0.04.0 | பயிரிடத்தக்கது பலன் பனை 1 |
| புன்செய் 420-2பி | குள்ளமாரெட்டி மகன் பொன்னப்பன் [எ] குள்ளம ரெட்டி | 0 02.0 | பயிரிடத்தக்கது பலம் பனை 1 பலன் தென்னை 1 |
| புன்செய் 420 3ஏ2 | பொன்னப்பன் எ குள்ளம ரெட்டி மனைவி சின்ன பாப்பாள் எ அக்கம்மாள் | 0,07.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 420 3பி1 | ஆணைடன் மகன் ராஜமாணிக்கம் | 0.02.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 420 1பி | குள்ளமரெட்டி மகன் பொன்னப்பன (எ) குள்ளம ரெட்டி | 0.08 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 419 2 | ராம ரெட்டி மக்கள் நரசிம்மன் 1 குள்ளமரெட்டி 2, ஒலி ரெட்டி 3. சின்னப்பன் 4 குள்ளமரெட்டி மகன் பொன்னப்பன் [எ] குள்ளமரெட்டி 5. | 0 22.5 | பயிரிடத்தக்கது பலன் பனை 1 |
| புன்செய் 502-2ஏ2 | சின்னப்பன் மனைவி லட்சுமி | 0.01.0 | பட்டா பாதை |
| புன்செய் 502-2பி2 | சின்னப்பன் மனைவி லட்சுமி | 0 08.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 519-1ஏ2 | திருப்பதி மனைவி காமாட்சி 1 திருப்பதி மக்கள் கோவிந்தன் 2 குஞ்சப்பன் 3 | 0 00.5 | பட்டா பாதை |
| புன்செய் 519-1சி2 | -ஷை- | 0 15 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 503 8ஏ2 | மொட்டைய கவுண்டர் மகன் பொன்னுசாமி | 0 00.5 | பயிரிடத்தக்கது பலன் பனை |
| புன்செய் 503 8பி2 | மொட்டைய கவுண்டர் மகன் பொன்னுசாமி | 0.01 5 | பட்டா பாதை |
| புன்செய் 503 11ஏ2 | சாமியண்ணன் மக்கள் கருப்பண்ணன் 1. சடையன் 2 சாமியண்ணன் மனைவி அய்யம்மாள் 3 | 0.06 0 | பயிரிடத்தக்கது கருவேல் மரம் 2 |
| புன்செய் 503 11பி1 | சாமியண்ணன் மக்கள் கருப்பண்ணன் 1 சடையன் 2 சாமியண்ணன் மனைவி அய்யம்மாள் 3 | 0 00 5 | பட்டா பாதை |
| புன்செய் 517 1பி2 | சின்னப்பன் மனைவி லட்சுமி | 0,00 5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 517 3ஏ2 | தாண்டா கவுண்டர் மகன் ஆறுமுகம் | 0 02.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 517 3பி2 | பெருமாள் மனைவி 1 சின்னப் பாப்பாள் 1 பெருமாள் மகன் வெள்ளையன் 2 | 0 01,5 | பயிரிடத்தக்கது பலன் தென்னை 1 |
| புன்செய் 517 3சி1 | பெருமாள் மனைவி சின்னப் பாப்பாள் 1 பெருமாள் மகன் வெள்ளையன் 2 | 0 00.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 517 3டி1 | பெருமாள் மனைவி சின்னப் பாப்பாள் 1 பெருமாள் மகன் வெள்ளையன் 2 | 0,01.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 517 3இ1 | தாண்டா கவுண்டர் மகன் ஆறுமுகம் | 0 04 0 | பயிரிடத்தக்கது பலன் தென்னை 2 கூரை வீடு 1 |
| புன்செய் 517-3எப்2 | அம்மாச மக்கள் அய்யண்ணன் 1 கோவிந்தன் 2 ராமசாமி 3 கண்ணுபையன் 4 | 0,00.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 517-3எச்2 | அம்மாச மக்கள் அய்யண்ணன் 1 ராமசாமி 2 | 0.02.0 | பயிரிடத்தக் |
| புன்செய் 517-3ஜி1 | அம்மாசி மக்கள் கோவிந்தன் கண்ணுபையன் 2. | 0 02 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 517-3ஜி2 | பெருமாள் மனைவி சின்னப் பாப்பாள் 1. பெருமாள் மகன் வெள்ளையன் 2. | 0 02 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 517-4சி2 | சின்னப்பன் மனைவி லட்சுமி 1 பொன்னுசாமி மனைவி பச்சமுத்தியம்மாள் 2 | 0,13.5 | பயிரிடத்தக்கது பலன் பனை 4 இளம்பனை 2 இளம் தென்னை 8 வேம்பு 7 தைலமரம் 1 |
| புன்செய் 516-4ஏ1பி | கணபதி கவுண்டர் மகன் பச்சமுத்து கவுண்டர் | ,, | பயிரிடத்தக்கது இளம் பனை 1 |
| புன்செய் 516-4ஏ2பி | பூதானவாரியம் | | பயிரிடத்தக்கது |
| புன்செய் 516-4பி2 | பூதானவாரியம் | 0'01'5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 516 4சி1பி | பூதான வாரியம் | 0,0,01 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 516 4சி2பி | பூதான வாரியம் | 0,01,0 | பட்டா பாதை |
| புன்செய் 515-3ஏ2 | சந்திரன் மனைவி லட்சுமி | 0,06.0 | பயிரிடத்தக்கது. |
| புன்செய் 515-3பி2 | பச்சமுத்து கவுண்டர் மகன் யு.பி. கிருஷ்ணன் கவுண்டர் | 0 13.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 514 3பி | பச்சைமுத்து கவுண்டர் யு.பி. கிருஷ்ணன் கவுண்டர் | 0,32.5 | பயிரிடத்தக்கது பலன் பனை 2 இளம்பனை 2 |
| புன்செய் 533 1பி | கிருஷ்ணன் மனைவி ராஜம்மாள் | 0. 13.5 | பயிரிடத்தக்கது பலன் பனை 11 இளம் பனை 7 |
| புன்செய் 533 2பி | நாச்சகவுண்டர் மகன் நாச்சன் | 0.12.0 | பயிரிடத்தக்கது இளம் பனை 2 |
| புன்செய் 533 4ஏ2 | மாரிமுத்து சாமியார் மக்கள் அர்ச்சுனன் 1, சக்கரை 2 | 0.10.0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 534-9சி2 | முத்துசாமி மகன் தங்கராஜ் | 0.02 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 534 9டி2 | முத்துசாமி மகன் மணி | 0.02,0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 535-9பி | கருப்ப கவுண்டர் மக்கள் ராமசாமி 1. செப்பா கவுண்டர் 2 சின்னபையன் மனைவி மல்லக்காள் 3 | 0 01 5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 568-1ஏ | ஆறுமுக கவுண்டர் மகன் அய்யண்ணன் | 0.00.5 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 568 2ஏ | கோவிந்தன் மகன் முத்துசாமி | 0.09.0 | பயிரிடத்தக்கது இளம் பனை 18 வேம்பு 2 ஆயமரம் 1 பாலமரம் 2 |
| புன்செய் 569 1ஏ | முத்துமகன் தங்கவேலு | 0.02 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 569 2எ | முத்து மகன் தங்கவேலு | 0,02 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 569 4ஏ | ராமசாமி மகன் சுந்தரசாமி | 0.02 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 569 5ஏ | பெருமகவுண்டர் மகன் மொட்டையன் (எ) நாச்சிக் கவுண்டர் | 0 02 | பயிரிடத்தக்கது பலன் பனை-1 |
| புன்செய் 569 6ஏ | மொட்டையன் (எ) முத்துசாமி மனைவி ராமாயி | 0 0 2 | பயிரிடத்தக்கது பலன் பனை-1: இளம் பனை 1 |
| புன்செய் 569-7பி | நாச்சான் மகன் ராஜமுத்து | 0.02.5 | பயிரிடத்தக்கது கருங்காலிமரம் 1 |
| புன்செய் 569 8பி | ராமசாமி மனைவி அமராவதி | 0 02 5 | பயிரிடத்தக்கது ஆய மரம் 1 |
| புன்செய் 569 18ஏ | முத்துமகன் தங்கவேலு | 0 01,0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 569-19 | ராமசாமி கவுண்டர் மகன் சுந்தசாமி | 0 03 0 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 569-20பி | முத்து மகன் தங்கவேலு | 0 01 0 | ,, |
| புன்செய் 569-21பி | செம்பன் மகன் சின்னபையன் | 0 08 | பயிரிடத்தக்கது |
| புன்செய் 569 23 | தேவேந்திர கவுண்டர் மகன் மாணிக்க கவுண்டர் | 0 02 | பயிரிடத்தக்கது |
| | மொத்த பரப்பளவு | 7 20.0 | |

ஒப்பம்

வி. ந. செபமாலை

அரசு துணைச் செயலர்

# அரசின் சார்பில் சுதந்திர தின விழா 10 லட்சம் பேருக்கு பொது விருந்து

சென்னை ஆக 14— சுதந்திர தினத்தை யொட்டி தமிழகத்தில் உள்ள 5 ஆயிரம் கோவில்களில் 'சமபந்தி' விருந்து நடைபெறுகிறது. அரசின் சார்பில் நடத்தப்படும் இந்த சமபந்தி விருந்தில் 10 லட்சம் பேர் சமபந்தி விருந்து உண்ணுகிறார்கள்.

சென்னை கோவில்களில் நடைபெறும் சமபந்தி விருந்தில் அறநிலையத் துறை அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் கலந்து கொள்கிறார்.

சென்னை கோட்டையில் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கொடி ஏற்றி வைக்கிறார்.

சுதந்திர தின விழாவை யொட்டி தமிழ்நாடு முழுவதும் அரசின் சார்பில் 5 ஆயிரம் கோவில்களில் சமபந்தி விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

தமிழ்நாடு முழுவதும் 10 லட்சம் பேர் சமபந்தி விருந்தில் கலந்து கொள்வார்கள்.

சென்னை மயிலாப்பூரில் உள்ள கபாலீசுவரர் கோவிலில் நாளை பகல் 11 மணிக்கு சமபந்தி விருந்து நடக்கிறது.

இதில் அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் வைஜயந்திமாலா எம்.பி. சட்டமன்ற உறுப்பினர்கள் வளர்மதி, தமிழ்மணி, இந்து அறநிலையத்துறை ஆணையாளர் டி. ஆர். ராஜ கலயாண சுந்தரம் துணை ஆணையாளர் என். சாமிநாதன் ஆகியோர் கலந்து கொள்கிறார்கள்.

வடபழனி கோவிலில் நடைபெறும் விருந்தில் அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் சட்டமன்ற உறுப்பினர் சவுரிராஜன் ஆகியோர் கலந்து கொள்கிறார்கள்.

மற்றும் கருமாரி அம்மன் கோவில், மாங்காடு அம்மன் கோவில், வட சென்னை ஆச்சாரப்பன் தெருவில் உள்ள ஆதிகேசவ பெருமாள் கோவில் நடைபெறும் விருந்தில் ஜேப்பியார் [illegible] சாமி எம்எல்ஏ ஆகியோர் பங்கேற்கின்றனர்.

செங்கை மாவட்ட சார்பில் காஞ்சியில் நடைபெறும் சமபந்தி விருந்தில் மாவட்ட ஆட்சித் தலைவர் பி. பாண்டியன் சட்டமன்ற உறுப்பினர் பா. ஜி. மாவட்ட ஆட்சித் தலைவரின் நேர்முக உதவியாளர் சிவராம கிருஷ்ணன் மற்றும் கோட்ட வளர்ச்சி அலுவலர் மக்கள் தொடர்பு அதிகாரி ஜி. மணிக்குமார் ஆகியோர் பங்கேற்கின்றனர்.

## அங்கமுத்து

ஆயிரம் விளக்கு தொகுதி நுங்கம்பாக்கம் அம்மன் கோவிலில் நடைபெறும் சமபந்தி விருந்தில் தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத் தலைவர் பா. அங்கமுத்து கலந்துகொள்கிறார்.

8ம் பக்கத் தொடர்ச்சி

செய்து உருவாக்குவோம் என்ற உறுதியை இந்த நாற்பதாவது சுதந்திர நாளில் சபதமேற்போமாக.

தேசபக்த பாரம்பரியத்தின் கடைசி வாரிசாக விளங்கும் நமது அன்புக்குரிய இளம் பிரதமர் ராஜீவ் காந்தியின் இடைவிடாத தேசிய சர்வதேசிய நல்வாழ்வுக்கான சகல முயற்சிகளுக்கும் நாமனைவரும் தோள் கொடுத்து நமது உயிரினும் மேலான சுதந்திர தீபம் அணையாமல் காப்போம்.

இவ்வாறு அமைச்சர் கண்ணன் தெரிவித்துள்ளார்.

# சுதந்திர தீபம் காப்போம்: அமைச்சர் கண்ணன் செய்தி

பாண்டிச்சேரி ஆக 14 சுதந்திர தீபத்தை என்றும் காப்போம் என துணை அமைச்சர் கண்ணன் தெரிவித்துள்ளார்.

நடுநிசியில் நாம் பெற்ற சுதந்திரம் நமக்கு மட்டுமல்ல உலகத்தின் பலபகுதிகளுக்கு விடியலைக் கொண்டு வந்தது.

ஏகாதிபத்திய காலனி ஆதிக்கத்துக்கு நாம்தான் முதன்முதலாக முடிவுரையை நமது கண்ணீராலும் செந்நீராலும் எழுதினோம்.

கண்ணீரும் செந்நீரும் முடிந்தவரை முழுக்க முழுக்க நமதாகவே இருந்தன. ஒப்பில்லா சமுதாயம் உலகத்திற்கோர் புதுமை. ஏகாதிபத்தியத்துக்கு ஆயுதங்கள் சொல்லித்தர முடியாததை உறுதிமிக்க நமது தார்மீக அகிம்சை அருமையாக உணர்த்தியது.

மக்களின் மன எழுச்சிக்கு முன்னால் ஏகாதிபத்தியத்தின் பீரங்கிகள் பலமிழந்து வந்த வழியே போய்ச் சேர்ந்தன. காந்தி என்ற ஒரு ஆத்மா ஆத்ம சோதனையில் வெற்றி கண்டு மகாத்மாவாக மாறி மகோன்னதங்களை இங்கே சாதித்தது. நேருவென்ற மனித நேயக்க ஜீவன் இங்கே மனிதர்களுக்கு ஒரு புதிய வாழ்க்கையை அமைத்து தந்தது.

சுரண்டலும் கயமையும் இல்லாத இந்தியாவை, கேதமும் பேடிமையும் இல்லாத இந்தியாவை, எல்லாரும் ஓர் விலை எல்லாரும் ஓர் நிறை எல்லாரும் ஓர் குலம், தனது எல்லாரும் ஒரு தாய் வயிற்று மக்கள் எல்லாருக்கும் எல்லாம் கிடைக்கும் புதிய இந்தியா என்ற சுடரொளி வீசும் சுபிட்சமான இந்தியாவை எந்த தியாகத்தையும்

7 ம் பகதி பார்க்க

# புதுவையின் சீரிய வளர்ச்சி: கவர்னர் திவாரி பாராட்டு

பாண்டிச்சேரி, ஆக 14- சுதந்திரத்திற்கு பின்னர் புதுவை மாநிலம் பல்வேறு துறைகளில் சீரிய வளர்ச்சி பெற்றுள்ளதாக கவர்னர் டி பி திவாரி தெரிவித்துள்ளார்.

இந்திய சுதந்திரத்தின் நாற்பதாண்டு நிறைவு விழாவினையும் புதுவை மாநில அதிகாரபூர்வ இணைப்பின் வெள்ளி விழாவையும் இவ்வாண்டு ஆகஸ்டு திங்களில் சிறப்புடன் கொண்டாடுகிறோம். இத்தருணத்தில் புதுவை மக்களின் மேம்பாடு கருதி நல்ல பல திட்டங்கள் செயல்படுத்தப்பட விருக்கின்றன.

இணைப்புக்குப் பின் புதுவை மாநிலம் பல்வேறு துறைகளிலும் சீரிய வளர்ச்சி கண்டுள்ளது. தனி நபர் வருமானம் மிகவும் உயர்ந்து காணப்படும் மாநிலங்களில் ஒன்றாக புதுவை விளங்குகிறது. கல்வி மற்றும் நலவழித் துறைகளில் புதுவை கண்டுள்ள முன்னேற்றம் பாராட்டத்தக்கதாகும். வறுமை ஒழிப்புத் திட்டங்களை நிறைவேற்றுவதில் அரசு முழுமுனைப்புடன் செயலாற்றி வருகிறது.

வளம்மிக்க புதுவையை உருவாக்கும் பெரும் பணியில் அரசின் முயற்சிகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் தர இத்தருணத்தில் உங்களை கேட்டுக்கொள்கிறேன்.

அண்ணல் காந்தியடிகளின் சீரிய தலைமையில் அளப்பரிய தியாகம் செய்து நாம் பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காக்க வேண்டியது நமது தலையாய கடமையாகும். சுதந்திரத்தைக் காக்க நமக்கு எப்போதும் விழிப்புணர்ச்சி தேவை. நாட்டின் ஒற்றுமையையும், ஜனநாயகத்தையும் அழிக்க முயலுகின்ற தீய சக்திகளை முறியடித்து நவபாரதத்தை உருவாக்கும் இலட்சியப்பணியில் தொடர்ந்து முன்னேற வேண்டும்.

சுதந்திரத் திருநாளைக் கொண்டாடும் இவ்வேளையில் புதுவை மாநில மக்கள் மேலும் பல வளங்கள் பெற்று தாயகத்தின் வரலாற்றில் தனிச்சிறப்புற்று விளங்க என மனமார்ந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

# சுதந்திரதினம்: மரியதாஸ் செய்தி

பாண்டிசேரி, ஆக. 14

40வது சுதந்திரதினத்தை ஒட்டி புதுவை அமைச்சர் ஜோசப் மரியதாஸ் விடுத்துள்ள செய்தியில் கூறியிருப்பதாவது:-

இந்தியநாட்டின் 40வது சுதந்திரதினத்தை கொண்டாடும் இனிய தருணத்தில் என்னுடைய மனமார்ந்த வாழ்த்துக்களை உங்களுக்குத் தெரிவிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

அண்ணல் மகாத்மா காந்தியின் அறப்போராட்டத்தில் முகிழ்ந்த சுதந்திரத்தை நாம் இன்று அனுபவித்து வருகிறோம். புதுவை மாநிலம் தாயகத்தோடு இணைந்து பிறகு நல்ல வளர்ச்சிகளைக் கண்டு இந்தியாவின் செல்லப் பிள்ளையாகத் திகழ்கிறது. புதுவையில் புதுவை பல்கலைக்கழகம், [illegible] கல்லூரி [illegible] முதலியவை புதுவை மாநிலத்தின் [illegible] எடுத்துக் [illegible] கூட்டுறவுத் துறையில் மனம் மகிழும் வண்ணம் சிறந்த சேவைகள் நடைபெற்று வருகின்றன. மாநிலத்தின் மீது பாரதப் பிரதமர் ராஜீவ் காந்தி தனிக்கவனம் செலுத்தி வருவது நாம் பெற்ற பேறாகும்.

உங்கள் வாழ்வில் பல [illegible] பெற்று வாழ எங்கும் நிறைந்த இறைவனை வேண்டுகிறேன்.

இவ்வாறு அமைச்சர் மரியதாஸ் தெரிவித்துள்ளார்.

# மிதக்கும் விமான தளம்

இந்தியகடற்படையில் இணைவதற்காக இரண்டாவது விமானம் தாங்கி கப்பலான ஐ என் எஸ் விராட் இம்மாதம் 21-ம் தேதி பம்பாய் வந்தடையும்.

ஐ என் எஸ் விராட் பல சிறப்புக்கள் பெற்றதாகும். முதலாவதாக எச் எம் எஸ் ஹெர்மெஸ் என்றழைக்கப்பட்ட இக்கப்பல் ராயல் கடற்படையின் முன்னணியில் இடம் பெற்றிருந்தது. 1982-ல் நடைபெற்ற பாக்லாந்து போரில் பங்கேற்றது. போருக்குப் பின்னர் இக்கப்பல் இருப்பில் வைக்கப்பட்டது. இக்கப்பலை இந்தியா பெற்றுக்கொள்வதற்கான ஒப்பந்தத்தில் 1986-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இந்தியாவும் இங்கிலாந்தும் கையெழுத்திட்டன.

டெவன் போர்ட் துறைமுகம் எச் எம் கடற்படை கப்பல் கட்டும் தளத்தில் இக்கப்பல் பழுது பார்க்கப்பட்டது. கப்பலைப்புனரமைக்கும் பணி 1987 ஏப்ரல் மாதத்தில் நிறைவடைந்தது. இங்கிலாந்தின் நாடாளுமன்ற உறுப்பினர் ஆர்கீஷ்டனும் இந்திய ஹைகமிஷனர் டாக்டர் பி.சி. அலெக்சாந்தரும் கப்பலை இந்தியாவிடம் ஒப்படைக்கும் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர்.

இதற்கான நிகழ்ச்சியின்போது திருமதி அசா அலெக்சாந்தர் இக்கப்பலுக்கு ஐ என் எஸ் விராட் என்று பெயரிட்டார். காப்டன் வி. பஸ்ரிச்சா இதற்கான ஆணையை வாசித்தார். இந்திய மூவர்ணக் கொடி ஏற்றப்பட்டது. எச் எம் எஸ் ஹெர்மஸ் கப்பல் ஐ என் எஸ் விராட்டாக இந்தியாவிடம் முறையாக ஒப்படைக்கப்பட்டது.

ஹெர்மஸ் கப்பலில் நவீன நுட்ப வசதிகள் செய்யப்பட்டன. 1981-ல் ஸ்கை-ஜம்ப் பொருத்தப்பட்டது. 1986 87-ல் மேலும் சில நவீன கருவிகள் பொருத்தப்பட்டன. கம்ப்யூட்டர் உதவியுடனான தகவல் செயல் திட்டம், முக்கிய எஞ்சின்களுக்கான ரிமோட் கட்டுப்பாட்டு யூனிட், கதிரியக்க பாதிப்பற்ற காற்று வழங்கும் அமைப்பு, நவீன டெக்லாண்டிங் அமைப்பு போன்ற பல வசதிகள் இக்கப்பலில் செய்யப்பட்டுள்ளன.

இந்தஆண்டு மே மாதம் இங்கிலாந்து கால்வாயில் இக்கப்பலின் பரிசோதனை செயல்முறை நடைபெற்றது.

தற்போது எந்ததடையும் இன்றி ஐ என் எஸ் விராட் இயங்க இயலும். கப்பலில் உள்ள இயந்திர அமைப்புகள் காலத்திற்கேற்ற வகையில் அமைக்கப்பட்டுள்ளன.

ஐ என் எஸ் விராட் கடற்ஹாரியர் வி எஸ் டி ஓ எல் விமானம் மற்றும் எல்லாவித கடற்படை ஹெலிகாப்டர்களையும் இயக்கும். கடலுக்கடியிலும் கடலிலும் பறத்தேயும் ஏதேனும் அபாயம் ஏற்பட்டால் இக்கப்பலில் கம்ப்யூட்டர் உதவியுடன் இயங்கும் தகவல் அமைப்பு உடனடி தகவல்களைத்தரும்.

இதனால் எதிர்க்கவோ தற்காப்பு நடவடிக்கைகளை மேற்கொள்வது குறித்தோ விரைந்து முடிவெடுக்க இயலும்.

விமானங்களை இறக்குவதற்கும் நிறுத்துவதற்கும் வசதியாக இக்கப்பலில் நிறைய இடம் உள்ளது. விமானங்கள் இறங்குவதற்கு வசதியாக இக்கப்பலில் நிறைய இடம் உள்ளது. விமானங்கள் இறங்குவதற்கு வசதியாக ஒளி வசதியும் செய்யப்பட்டுள்ளது.

கிறிஸ்துமஸ் மரவிளக்குகள் உள்ளன. எந்த வெப்ப நிலையிலும் விமானங்கள் இறங்க வசதியான கருவிகளும் உள்ளன. கடல்ஹாரியர்கள் சேதக்ஹெலிகாப்டர்கள் உட்பட மொத்தம் 30விமானங்கள் இருக்கக்கூடிய வகையில் கப்பல் அமைக்கப்பட்டுள்ளது.

அறுவைச்சிகிச்சைக்கூடம் ஆய்வுக்கூடம் எக்ஸ்ரே பிரிவு பல வைத்தியப் பிரிவு உட்பட பல நவீன வசதிகள் உடைய 16 படுக்கை கொண்ட மருத்துவமனையும் ஐ என் எஸ் விராத் கப்பலில் உள்ளது. அவசர காலங்களில் பயன்படும் வகையில் இம்மருத்துவ வசதிகள் தயார் நிலையில் உள்ளன.

ஐ என்.எஸ் வீராத்தின் வருகையால் இந்திய கடற்படை மேலும் வலுப்பெறும். நம்நாடு விடுதலையடைந்த 40வது ஆண்டு விழாவைக் கொண்டாடும் இந்தத் தருணத்தில் இக்கப்பல் இந்தியக் கடற்படையுடன் இணைகிறது. இது நமது படைகளுக்குப் புதிய பலம் சேர்த்து நாட்டிற்கும் பெருமை சேர்க்கும் என்பது திண்ணம்.

# அண்ணா நாளிதழ் வழங்கும்

# ★40-வது ஆண்டு சுதந்திர தின சிறப்புமலர்★

## வாழ்த்துக் கூறுவோம்...

டாக்டர் ம. பொ. சி. [தமிழ் வளர்ச்சிக் குழுத் தலைவர்]

நீடு சுதந்திரம் பெற்ற நாற்பதாம் ஆண்டு நிறைவை பாரத மக்கள் மகிழ்ச்சிப் பெருக்கோடு கொண்டாடுகின்றனர்.

தமிழகமக்களும் ஏனைய மொழிவழி தேசிய இனங்களோடு இணைந்து நிலறு விடுதலை விழாவைக் கொண்டாடுகின்றனர். வீர சவார்க்கார் போன்ற பேரறிஞர்கள் பலர் அந்தமான் தீவில் அல்லலுற்றனர். கப்பலோட்டிய தமிழர் போன்ற வீரர்கள் ஆயுள் தண்டனை பெற்றனர்.

இப்படி கடுமையாகப் போராடி பாரதம் பெற்ற சுதந்திரத்திற்கு இந்த ஆகஸ்டு 15ல் நாற்பதாண்டுகள் நிறைவு பெறுகிறது. அதனால் குமரி முதல் இமயம் வரை விழா எடுக்கப்படுகிறது. மத்திய அரசும் மாநில அரசுகளும் கூட்டு சேர்ந்து திட்டமிட்டுவிழா எடுக்கின்றன.

சரித்திர முக்கியத்துவம் பெற்ற இடங்களைத் தேர்ந்தெடுத்து அங்கெல்லாம் இருந்து புனித மண்களை எடுத்து பாரதமெங்கும் பரவிய முறையில் நினைவுச் சின்னங்களும் எழுப்பப்படுகின்றன. அனைத்து மாநிலங்களிலும் எடுக்கப்பட்ட மண்களைக் கலந்து அப்படி கலந்த மண்ணை பல்வேறு மாநிலங்களுக்குப்பிரித்துக் கொடுத்து ஒவ்வொரு மாநிலத்திலும் நினைவுச் சின்னங்கள் எழுவதற்கு மத்திய அரசு வழி செய்திருக்கிறது.

சுதந்திரம் பெற்றபின்னுள்ள நாற்பதாண்டுகளிலே பாரதம் பல துறைகளிலும் பெருவாக முன்னேறியிருக்கிறது. 'முன்னேற்றமே ஏற்படவில்லை' யென்று ஒப்பாரி வைப்பாரை மறந்து விடுவோம்.

கடந்த நாற்பதாண்டுகளில் பாரதம் பல்வேறு துறைகளிலும் அடைந்துள்ள முன்னேற்றத்தைக் கண்டு வல்லரசு நாடுகள் பொறாமைப் படுகின்றன.

இந்தியாவின் நட்பு நாடான சோவியத்ரஷ்யா வியந்து வியந்து போற்றுகிறது. விண்வெளிச் சாதனையிலே இந்தியருக்கு பங்களித்த பெருமைப்படுத்துகிறது.

திட்டமிட்டு முன்னேறி வரும் நாடு என்ற நம்பிக்கையோடு ரூபாய்களை கோடிகோடியாக பாரதத்திற்குக் கொட்டிக் கொடுக்கிறது உலக வங்கி.

அமெரிக்கா, பிரிட்டன், பிரான்சு, மேற்கு ஜெர்மனி போன்ற வளர்ந்தநாடுகள் வளர்ச்சிப் பாதையில் முன்னேறிக் கொண்டிருக்கும் நாடு என்ற நம்பிக்கையோடு பண்டங்களையும், உற்பத்திக்கான மூலப் பொருட்களையும் தொழில் நிபுணர்களையும் பாரதத்திற்கு வழங்கி வருகின்றன.

இவ்வளவையும் மறந்து 'என்ன முன்னேற்றத்தைக் கண்டுவிட்டது?' என்று வினா எழுப்பி விடுதலை விழா அரங்கை விவாத அரங்காக மாற்ற மகிழ்வோர் சிந்தித்துப்பார்க்க வேண்டும்.

இந்தியா விடுதலை பெற்ற பின்னர் இந்தோனேஷியா போன்ற பலவேறு நாடுகளின் விடுதலைக்கு அதுகைகொடுத்திருக்கிறது.

இன்று நாம் காணும் சுதந்திர வங்கதேசம் பாரதத்தின் படைப்பாகும்.

சரியாகநாற்பது ஆண்டுகளுக்கு முன்பு வெள்ளையர் ஆட்சி இந்தியாவை விட்டு வெளியேறியபோது முழு இந்தியாவையும் நேரு தலைமையில் இயங்கிய ஆட்சியிடம் அவர்கள் ஒப்படைக்கவில்லை.

கவர்னரின் தலைமையில் இயங்கிய 'பிரிட்டிஷ் இந்தியா' எனப் பெயர் பெற்றிருந்த பிரதேசத்தையே ஒப்புவித்துச்சென்றனர் பிரிட்டிஷார்.

எஞ்சியிருந்த சுமார் 600 சமஸ்தானங்களை 'சுதந்திரத் திட்டுகளாக" சுதந்திர இந்தியா என்னும் பச்சைக்குழந்தை சுவறி விழும் படுகுழிகளாக விட்டுச்சென்றனர்.

சமஸ்தான இந்தியாஎன்னும் பிரதேசமானது முழு இந்தியாவின் மக்கள் தொகையிலே மூன்றில்ஒரு பங்கினரை கொண்டிருந்தது.

சுதந்திரம் பெற்ற பத்தே ஆண்டுகளுக்குள் நேருஜியின் தலைமையைப் பெற்றிருந்த இந்திய அரசானது அனைத்து சமஸ்தானங்களையும் இந்தியாவுடன் இணைத்து விசால பாரதத்தை படைத்து முடித்தது. இந்தச் சாதனையைக் கண்டு உலகமே வியந்தது. ஒரு தோட்டாவைக்கூட செலவழிக்காமல் சுதேச மன்னர்களிடம் தேசபக்திக்கு வேலை கொடுத்து அவர்கள் ஆண்ட பிரதேசங்களை இந்தியாவுடன் ஐக்கியப்படுத்தினார் சர்தார் படேல்.

இதை வெற்றிகரமாகச் செய்யவில்லையானால் சுதந்திர பாரதம் கடந்த நாற்பதாண்டுக் காலத்திற்குள் சுக்குநூறாக உடைபட்டுப் போயிருக்கும். அதிலிருந்து நாடு காக்கப்பட்டது நாம் புரிந்த சாதனையல்லவா?

பிரிட்டிஷார் சுதந்திர இந்தியாவுக்கு விட்டு வைத்துப்போன கடும் பிரச்சினைகளிலே ஒன்று ராஜ்யங்களை மொழிவாரியாகத் திருத்தியமைப்பது. அதிலேயும் வெற்றி கண்டது இந்திய அரசு.

1956ல் ராஜ்யங்களை புனரமைக்கும் பஸல்அலி கமிஷன் திட்டம் வெளியானபோது 'எல்லைப் பிரச்சினை' என்னும் பெயரால் ஓர் உள்நாட்டுக் கலவரமே உருவானதைக் கண்டோம்.

அதையும் சமாளித்து,

[II ம் பக்கம் பார்க்க]

## விடுதலை விழாவில் ஓர் வெற்றித் திருப்புமுனை!

ஈ. வே. கி. சுலோசனாசம்பத்

[தலைவர், தமிழ்நாடு தொழில் வளர்ச்சி நிறுவனம்]

இந்திய திருநாடு விடுதலை பெற்று நாற்பதாண்டுகளை எட்டியுள்ளோம். இன்றைய உலகச் சூழ்நிலையில் ஒரு நாடு சுதந்திரமாகவும் ஜனநாயக ரீதியாகவும் செயற்படுவதே அரிதான நிலையாக இருக்கிறது. சர்வாதிகாரம் பாலைவனமாகத் தோற்றமளித்திடும் உலகில் இந்திய திருநாடு தான் ஜனநாயகப் பசுஞ்சோலையாகப் பரிணமிக்கிறது என்று நமது குடியரசுத் தலைவர் ஆர். வி. அவர்கள் பதவி ஏற்றதும் ஆற்றிய சொற்பொழிவில் குறிப்பிட்டது நூற்றுக்கு நூறு உண்மை.

இந்தியத் துணைக்கண்டத்தின் அண்டை நாடுகளிலும் கூட சர்வாதிகார சூறாவளி வீசுகிறது. பாகிஸ்தான், இலங்கை, பர்மா, சீனா ஆகிய பல நாடுகளிலும் ஜனநாயகம் கேள்விக்குறியாக்கப்பட்டிருக்கிறது. ஆனால், இந்தியத் துணைக்கண்டத்தில்தான் நாற்பதாண்டுகளாக அபரிதமான சுதந்திரமும், அற்புதமான ஜனநாயக மேம்பாடும் மேலோங்கி நிற்கிறது.

7 பொதுத் தேர்தல்களை நடத்தி இந்திய ஜனநாயகத்தின் கண்ணியமான பரிணாமத்தை நிரூபித்துள்ளோம். முதலமைச்சர் பதவி ஏற்று, சிகிச்சைக்காகப் பேரறிஞர் அண்ணா அவர்கள் அமெரிக்கா சென்றபோது நியூயார்க்கில் உலக நிருபர்களைச் சந்தித்தபோது அவரிடம் ஒரு கேள்வி கேட்கப்பட்டது. "பண்டித நேரு அவர்கள்மீது இந்திய மக்கள் மட்டுமின்றி உலக நாடுகளும் மிகவும் மதிப்பு வைத்திருக்கின்றனவே இந்த அளவு மகத்துவத்திற்குக் காரணம் என்ன?" என்று கேட்கப்பட்டது.

அதற்குப் பதிலளித்த பேரறிஞர் அண்ணா அவர்கள் இந்தியாவிற்குக் காங்கிரஸ் பேரியக்கம் சுதந்திரம் பெற்றுத்தந்தது பிரதமர் பொறுப்பேற்ற பண்டித நேரு அவர்கள், இந்திய நாட்டைக் குடியரசாக்கி ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை பொது தேர்தலை நடத்தி ஜனநாயக ரீதியாக ஆட்சி

IV ம் பக்கம் பார்க்க

# வாழ்த்துக் கூறுவோம்...

[1ம் பக்கத் தொடர்ச்சி]

1956 நவம்பர் 1ல் ராஜ்யங்கள் மொழிவாரியாக திருத்தியமைக்கப்பட்டன. அப்போது தமிழகத்தில் தனியரசு அமைந்தது. அதனால்தான் சுதந்திர இந்தியா அப்படி என்ன சாதித்து விட்டது?' என்று இன்று விடுதலை விழா அரங்கில் வினா எழுப்புவோர்கூட பத்தாண்டுக் காலம் பதவி சுகத்தை அனுபவிக்க முடிந்தது.

தனியரசு பெற்ற தமிழ் மாநிலம் தமிழ்நாடு என்னும் தன்மானப் பெயரையும் பெற்றது.

முன் எப்போதோ கோளத்திற்குப் பறிபோன குமரிமுனைப் பிரதேசமும் ஆந்திரத்திற்குப் பறிபோன குமரன்மலைப் பிரதேசமும் புதிதாக அமைந்த தமிழகத்தோடு இணைக்கப்பெற்றன. இவற்றுக்கெல்லாம் கொடுக்காதவர்களே சுதந்திரம்பெற்றதால் தமிழர் அடைந்த பலன் என்ன? என்று வினா எழுப்புகின்றனர் விடுதலை விழாவிலே. தமிழகத்திலே தமிழ் ஒன்றே ஆட்சி மொழி என்ற சட்டம் பிறந்ததே அது எதனால்? பாரதப் பெருநாடு சுதந்திரம் பெற்று தமிழகத்தில் தமிழரசு அமைந்ததனால் அன்றோ! நன்றியுள்ள தமிழ் மகனே சிந்தித்துப் பார்!

''எல்லோருக்கும் கல்வி என்னும் திட்டப்படி இலவசமாக மதியச் சோறு போட்டுச்சீருடை தந்து, புத்தகங்களும் வழங்கி பள்ளிகளின் எண்ணிக்கையைப் பெருக்கியதே, டாக்டர் எம்.ஜி.ஆர் அரசு அது சுதந்திரத்தின் பலனன்றோ!

பாரதம் விடுதலைக்குப் போராடிய காலத்திலே, ''வடக்கு வாழுது; தெற்கு தேயுது'' என்றொரு குரல் கேட்டது. விடுதலைப் பாசறைக்கு வெளியே அது அன்னியராட்சி உருவாக்கிய அவலநிலை.

ஆனால் தேசம்விடுதலை பெற்ற பின்னர் பொருளாதாரத்துறையிலும் பிற துறைகளிலும் வடக்கோடு தெற்கும் சமமாக நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருவதைப் பார்க்கிறோம் அல்லவா!

கடந்துபோன நாற்பதாண்டுகளிலே தமிழகத்திலே தோன்றியுள்ள கனரகத் தொழில்களுக்குக் கணக்கேயில்லை.

அத்துறையிலே இன்னும் இன்னும் முன்னேறத்தான் போகிறது தமிழகம்.

இது பாரதம் சுதந்திரம் பெற்றதால் தமிழகம் அடைந்த நன்மையல்லவா? அ.இ.அ.தி.மு.க அரசும் இ. காங்கிரசுமுள்ள மத்திய அரசும் புரிந்த சாதனைகள் அல்லவா?

வெள்ளையர் ஆதிக்கத்திலிருந்து பாரதம் விடுதலை பெறுமானால், வருணாசிரமிகள்தான் பிற்பட்டோர் மீது ஆதிக்கம் செலுத்துவார்கள் என்று பேசப்பட்டது விடுதலைப் பாசறைக்கு வெளியேயிருந்தவர்களால்! ஆனால் நடந்தது என்ன?

'வருணாசிரமத்திற்கு நாங்கள் முதல்நம்பர் எதிரிகள்'' என்று சொல்லிக் கொள்ளும் பகுத்தறிவு பாரம்பரியத்தினர் தொடர்ந்து இருபதாண்டு காலம் ஆட்சியிலிருப்பதைப் பார்க்கிறோம் அல்லவா!

இது பாரதம் சுதந்திரம் அடைந்ததன் பயன் அல்லவா?

வேதகாலந் தொட்டு வெள்ளையர் புகுந்த காலம்வரை சமத்திரிமார் வகுத்த சாத்திரங்களே சமுதாயத்தின் சட்டங்களாக இருந்தன.

ஆம். நால்வருணங்களில் மேல்வருணத்தார் வகுத்த விதிப்படி சமுதாயம் சென்றது. நாடு விடுதலை பெற்றபின், நான்கு வருணங்களுக்கும் அப்பாற்பட்ட பஞ்சம வருணத்தவர் எனப்பட்ட டாக்டர் பி ஆர் அம்பேத்கார் வகுத்த சட்டம் அல்லவா இன்று நாட்டை ஆள்கிறது இது பாரத சமுதாயம் அடைந்த சுதந்திரத்தின் நற்பலன் அல்லவா!

பெண்களுக்குச் சொத்து உரிமை வழங்கியதும் பெண்களுக்கெனத் தமிழகத்திலே தனியாகப் பல்கலைக் கழகம் தோன்றியதும் பெண் ஒருவர் பிரதமர் பதவியில் பத்தாண்டு காலம் பதவி வகித்ததும் சுதந்திரத்தின் பலன் அல்லவா?

தமிழர், சுதந்திரத்தின் நாற்பதாம் ஆண்டைக் கொண்டாடும் இந்த நேரத்திலே, 80 கோடி மக்களைக் கொண்ட இந்தியாவின் குடியரசுத் தலைவர் பீடத்திலே ஒரு தமிழர் வீற்றிருக்க முடிகிறதே அது இந்தியா சுதந்திரம் அடைந்ததால் தமிழகம் பெற்ற நற்பயன் அல்லவா?

இனி, சர்வதேச அரசியலை நோக்குவோம்.

சுதந்திரம் பெற்ற இந்தியா எதிரும் புதிருமாக அமைந்த இருவேறு வல்லரசு முகாம்களில் சேரமறுத்து எல்லையற்ற துணிவோடு மூன்றாவது உலகம்ஒன்றைப்படைத்து அந்த உலகத்தின் தலைமைப்பீடத்திலும் அமர்ந்ததே அது சர்வதேச ரீதியில் பாரதம் புரிந்த சாதனையல்லவா?

இன்னும் காமன்வெல்த் முகாமிலும், தெற்காசிய நாடுகளின் முகாமிலும் பாரதம் தனிச் செல்வாக்கு பெற்றிருப்பதை யாரேனும் மறுக்க முடியுமா?

இந்திய சுதந்திர நாற்பதாம் ஆண்டைக் கொண்டாடும் இந்த நேரத்திலே அண்டை நாடான இலங்கையோடு பாரதம் உடன்படிக்கை கண்டதே அது சாதாரண விஷயமா?

இந்திய சுதந்திரத்திற்கு நாற்பது வயதாகிறதென்றால் இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கும் அதே வயதுதான்.

அந்தப் பிரச்சினையானது 1948ல் தோன்றி காலந்தோறும் வண்ணங்கள் மாறி 1983ல் புயல்கள் போராட்டமாக உருவெடுத்தது.

இந்தியா சிறிது பொறுமை இழந்திருந்தால் தானும் உலகப் போரில் சிக்கிக்கொண்டு ஈழப் பிரதேசத் தமிழர்களையும் இடர்ப்படுத்தியிருக்கும்.

இலங்கைத் தமிழர் பிரச்சினையிலே அதிபர் ஜெயவர்த்தனவுக்கும் பிரதமர் ராஜீவ் காந்திக்கும் உடன்படிக்கை ஏற்பட முடிந்ததென்றால் பாரதம் சுதந்திரம் பெற்றதன் விளைவு மட்டுமல்ல; தமிழகத்தில் டாக்டர் எம் ஜி ஆர் தலைமையில் அ இ அ தி மு க அரசு அமைந்ததன் விளைவுமாகும்.

இலங்கையிலுள்ள இந்திய வம்சா வழித்தமிழர் பிரச்சினையிலே புதுடில்லியில் பாரதப் பிரதமர் லால் பகதூர்சாஸ்திரியும், லங்கைப் பிரதமர் பண்டார நாயகாவும் உடன்படிக்கை கண்டனர். அதிலே தமிழக அரசின் ஆலோசனைக் கேட்கவில்லை இந்திய அரசு.

பின்னர் தமிழகத்திற்கே உரியதான கச்சத்தீவை இலங்கைக்குத் தானம் செய்த போதும் தமிழக அரசின் கருத்தைக் கேட்க மறுத்துவிட்டது இந்திய அரசு இன்று நாம் காண்பது என்ன?

ஈழத்தமிழர் பிரச்சினையிலே ஒவ்வொரு கட்டத்திலும் தமிழக முதலமைச்சரைக் கலந்தாலோசித்தார் பிரதமர் ராஜீவ்காந்தி.

அவசியம் ஏற்பட்டபோது டில்லிக்கு வருமாறு எம்.ஜி. ஆருக்கு அவசர அழைப்பும் விடுத்தார்.

சில சந்தர்ப்பங்களிலே மத்திய அமைச்சரவையிலுள்ள மூத்த மந்திரிகளை சென்னைக்கு அனுப்பி ராமாவரம் தோட்டத்தில் முதல்வரைச் சந்தித்துப் பேசச் செய்தார் ராஜீவ் காந்தி.

இப்படி, இதற்குமுன் எப்போதேனும் நடந்தது உண்டா?

இதை நான் எழுதிக் கொண்டிருக்கும் நேரத்தில் கூட இந்திய இலங்கை உடன்பாடு செயல்படுத்துவதில் ஏற்பட்டுள்ள சிக்கல் காரணமாக, திரு பண்ருட்டி ராமச்சந்திரன் அவர்களை பிரதமர் ராஜீவ் காந்தி டில்லிக்கு அழைத்ததாகச் செய்தி கிடைத்திருக்கிறது.

இத்தனைக்கும் மேலாக சென்னைக் கடற்கரைக் கூட்டத்தில் பிரதமர் ராஜீவ் காந்தி பேசிய போது தம் அருகிலிருந்த தமிழக முதல்வரை வானளாவப் புகழ்ந்து பேசினாரே!

''இந்திய- இலங்கை உடன்படிக்கைக்கு எம் ஜி ஆரின் ஒத்துழைப்புதான் காரணம்'' என்றார்.

அவர் ஒத்துழைப்பு இல்லையேல் இந்த உடன்படிக்கையே இல்லை என்றும் பிரதமர் பேசினார்.

அயல் நாட்டுறவு என்பது இந்திய அரசமைப்புப்படி மத்திய அரசுக்கே உரியது அதில் தலையிடுவதற்கு மாநில அரசுக்கு உரிமை கிடையாது.

அதனாற்றான் சாஸ்திரி பண்டாரநாயகா உடன்படிக்கையின் போதும், கச்சத்தீவை இலங்கைக்கு தானம் செய்தபோதும் தமிழக அரசைப் புறக்கணித்தது இந்திய அரசு.

இன்றும் அதே அரசமைப்புதான் அமலில் இருக்கிறது. ஆயினும் பிரதமருடைய பண்பாட்டாலும் தமிழக முதல்வர் எம் ஜி ஆரின் ராஜதந்திர முறையாலும் இலங்கை தமிழர் பிரச்சினையிலே இந்திய அரசும் தமிழக அரசும் சமநிலையில் செயல்படுகின்றன.

சுதந்திர நாற்பதாம் ஆண்டைக் கொண்டாடும் இந்நேரத்திலே தமிழ் மாநிலம் இந்திய அரசமைப்பையும் ஊடுருவி மத்திய அரசின் வயல்துறை விஷயத்தின் மீது செல்வாக்கு செலுத்துவதைப் பார்க்கிறோம்.

ஈழத் தமிழரை பாரதப் பிரதமரும் தமிழக முதல்

11ம் பக்கம் பார்க்க

# வெற்றித் திருப்புமுனை...

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

களை அமைக்கும் பரிபூரண ஜனநாயக உரிமையை வழங்கினார் சுதந்திரம்பெற்ற நாடுகள் பலவும், ஜனநாயக உரிமைகளுக்காகச் சமர் புரிகின்றன ஆனால் பண்டித நேரு அவர்கள் தான் ஒரு துளிமையில் இந்திய ஜனநாயகத்தை உறுதி செய்தார்கள் அவர்கள் விரும்பியிருந்தால் காங்கிரசே இந்த நாட்டை ஆண்டாண்டு காலம் ஆளட்டும் என்று ஆண்டு விட்டுப் போயிருக்கலாம்; ஆனால் தூய ஜனநாயக உணர்வுள்ள பண்டிதநேரு இந்தியத் திருநாட்டை சுதந்திரம் பெற்ற நாடாக மட்டுமின்றி இது ஜனநாயகப் பூங்காவாகவும் விளங்க அடிப்படை அமைத்தார்கள்; இதற்காகவே பண்டித நேரு வரலாற்றில் என்றும் நிலைத்து நிற்பார்.' என்று பேரறிஞர் அண்ணா அவர்கள் குறிப்பிட்டார்கள்,

இந்தியத் திருநாடு விடுதலை பெறுவதற்கு அண்ணல் காந்தியடிகளின் தலைமையில் சாவபரித்தியாகம்செய்துகோடானு கோடி மக்கள் விரத்தியாகம் செய்து இரத்தம் சிந்தி இருட்டு சிறைகளில் வருந்து, இன்னல்கள் பலவற்றுக்கு ஆளாகி ஈடு இணையற்ற சுதந்திரத்தைப் பெற்றுத்தந்தார்கள் இந்நன்னாளில் அந்தவீரத் தியாகிகளை நினைத்து வணங்கக் கடமைப்பட்டுள்ளோம். அதற்கும் மேலாக பெற்ற சுதந்திரத்தைக் காத்து. ஜனநாயக ரீதியிலே தேசத்தை நடத்திச் செல்லும் மாட்சிமைக்கு வழி வகுத்துத்தந்த தேசத் தலைவர்களுக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளோம்

இந்தியா ஒன்றும் சின்னஞ்சிறு நாடு அல்ல! இலங்கை பாகிஸ்தான் பர்மா போன்று சின்னஞ் சிறிய நாடு அல்ல; இந்தியத் துணைக் கண்டம பரந்து விரிந்த பாரத நாடு; 78 கோடி மக்களை அடக்கிய மிகப் பெரிய தேசம். இங்கேதான் சாதி மதஇன வேறுபாடுகளும் அதிகம் ஆனாலும் வேற்றுமையில் ஒற்றுமை எனும் மகத்தான சிறப்புக்கு உதாரணமாகத் திகழ்வதும் இந்தியத் துணைக்கண்டம் தான்.

இவ்வளவு பெரிய தேசத்தில் அமைதிகாத்து. வளம் குவித்து. ஜனநாயகத்தை நிலைநாட்டி. வல்லரசுகளுக்கு இணையான நாடாக பவர் பெற்றுத் திகழ்கிற ஒளிமயமான காட்சி கண்டு பிற நாடுகள் அதிசயிக்கின்றன நாட்டிற்குஇத்தகைய வலிமை சேர்த்ததில் பிரதமர் திருமதி இந்திரா காந்தி அம்மையாரின் பங்கினை தேசம் என்றும் மறவாது; தேசத்திற்காகவே பிறந்து. தேசத்திற்காகவே உழைத்து. இரத்தம் சிந்தி உயிர்த்தியாகம் செய்த உத்தமத்தலைவியை உலகம் உள்ளளவும் நாடு மறவாது.

அன்னையின் வழியில் அவரது அருந்தவப் புதல்வர் ராஜீவ் காந்தி அவர்கள் தமது இளம் தோளில் இந்தியாவின் பரிபாலன பாரத்தைச் சுமந்து மிகலாவகமாக அவர்கள் ஆற்றி வரும் பெரும் பணியை உலகமே பாராட்டுகிறது.

இந்தியத் திருநாட்டின் அமைதி காப்பது மட்டுமின்றி அண்டை நாடான இலங்கைக்கே பெரும் தலைவலியாக இருந்த இனப் பிரச்சினைக்கும் தீர்வு கண்டு இலங்கையின் அமைதிக்கும் உத்திரவாதம் அளித்துள்ள பாரதப் பிரதமர் ராஜீவ் காந்தியின் அபார சாதனை உலக நாடுகளின் பெரும் பாராட்டுக்களைப் பெற்றுத்தந்துள்ளது. இந்தப் பணியில் இலங்கையில் அவரது உயிருக்கே ஆபத்து ஏற்பட்டு [illegible] ஒருவன் கொலை முயற்சியில் ஈடுபட்ட நேரத்திலும் நல்வாய்ப்பாக காயமின்றித் தப்பித்து. முகிலைக் கிழித்து வந்த முழுமதி போல் அவர் நாடு திரும்பி 'தேசத்திற்கு இன்னும் ஆற்ற வேண்டிய பணிகள் ஏராளம்; எந்த எதிர்ப்புக்கும் அஞ்சாது என் பணி தொடரும் என்று அவர்கள் விடுத்துள்ள வீர முழக்கம் இந்தியத் திருநாட்டின் புகழைப் பறை சாற்றுவதாகும்.

படையெடுக்காமலே ரத்தம் சிந்தாமலே நமது இந்திய ராணுவம் இன்று இலங்கையில் ஈழத்தமிழர்களைக்காத்து அமைதியை ஏற்படுத்தி உரிமைகளை மீட்டுத்தரும் பணியில் வெற்றியுடன் செயற்பட்டு வருகிறது இது உலக வரலாற்றில் சமாதான இலட்சிய யாத்திரையில் இதற்குமுன் நடைபெறாத பெரும் சாதனையாகும்.

இந்தியாவிலே தமிழகம் என்ற மாநிலம் இருப்பது போல் இலங்கையிலும் தமிழ் மாநிலத்தைத் தோற்றுவித்திடும் மகத்தான சாதனையை முதல்வர் புரட்சித் தலைவர் ஏற்படுத்தியுள்ளார், இந்தச் சாதனையால் உலகப் படத்தில் மற்றொரு தமிழ் மாநிலமும் உருவாகிடும் காட்சியை உலகம் காணுகிறது

இதற்கு ஒத்துழைப்புத் தந்த ஈழ விடுதலைப் போராளிகளின் தலைவர் பிரபாகரன் மற்றும் இலங்கைத் தமிழர் அமைப்புக்கள் ஈழத் தமிழ் மக்கள் ஆகிய அனைவருக்கும் நாம் ஒன்றுதெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளோம் இந்த அளவு ஜெயவர்த்தனேயைச் சரியான வழிக்குக் கொணர்ந்து சாதனைபடைத்த பிரதமர் ராஜீவ் காந்திக்கும். முதல்வர்புரட்சித்தலைவர் அவர்களுக்கும் இந்திய இலங்கை மக்கள் நன்றிக் கடன் பட்டுள்ளனர்.

இவ்வகையில் நாற்பதாவது ஆண்டுச் சுதந்தரத் தினம் நாட்டு வரலாற்றில் புதியதோர் திருப்பத்தை ஏற்படுத்தி. புத்தம் புது பொன்னேட்டையும் இணைத்துக் கொண்டு புத்துணர்ச்சியோடு திகழ்கிறது இன்று இந்தியத் துணைக் கண்டத்திற்கே ஒளியூட்டும் முழுநிலவாகத் திகழ்கிறார் பாரதப் பிரதமர் ராஜீவ் அவரைச் சுற்றிலும் எண்ணற்ற நட்சத்திரங்கள் இருந்தாலும் ஒளிமிக்க துருவ நட்சத்திரமாகத் திகழ்பவர் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அவர்கள்

பிரதமர் ராஜீவ் அவர்களுக்கும் முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களுக்கும் உள்ள நட்பு அரசியல் அடிப்படைகளையும் கடந்து அண்ணன்-தம்பி உறவாக குடும்ப பாசமாக எக்காலத்தும் குறைவற்ற நட்பாகத் திகழ்கிறது.

இதனால், தமிழக முன்னேற்றம் தடங்கலின்றி செயல்படுகிறது. மற்ற மாநிலங்களுக்கு வழிகாட்டி மாநிலமாகத் திகழ்கிறது தமிழகம்!

சுதந்திரப் போராட்ட காலத்திலும் தமிழகம்தான் வடக்கிறகுவழிகாட்டியது. இன்று சுதந்திர இந்தியாவில், சாதனை குவிப்பதில் சரித்திரப் படைப்பதில் பிற மாநிலங்களுக்கு உதாரணமாகவும் வழிகாட்டியாகவும் திகழ்கிறது தமிழகம். தமிழகத்திற்கு இத்தகையபெருமை சேர்ப்பவர் பொன்மனச் செம்மல் புரட்சித்தலைவர் அவர்கள்.

நாற்பதாண்டுச் சுதந்திர தினவிழாவில்பிரதமர் ராஜீவ் முதல்வர் புரட்சித் தலைவர் ஆகியோருக்கு நல்வாழ்த்துக்களைக் குவித்து 'வாழ்க சுதந்திரம்' என்று போற்றி வணங்குவோம்.

# வாழ்த்துக் கூறுவோம்...

(1-பக்கத் தொடர்ச்சி)

வரும் காட்டிக் கொடுத்து விட்டார்கள் என்று சொல்லி இங்குள்ள தமிழர் சிலர் ஏங்குகின்றனர்

ஈழப் புலிப்படையின் மாவீரத் தலைவர் பிரபாகரன் நிபந்தனையின்றி இந்திய இலங்கை உடன்படிக்கையை ஏற்றிருக்கிறார்.

அவரோடு வேறுபட்டு தனித்தனியே இயங்கி வரும் அணிகளின் தலைவர்களும் உடன்படிக்கையை முணுமுணுப்பின்றி ஒப்புக்கொண்டு விட்டனர் அவர்கள் பிரதமரையும் முதல்வரையும் வாயார வாழ்த்தவும் செய்கின்றனர்.

ரஷ்யா, அமெரிக்கா, ஜப்பான். மேற்கு ஜெர்மனி ஆகிய வல்லரசு நாடுகள் எல்லாம் கொழும்பு உடன்படிக்கையை வரவேற்று இருக்கின்றன

ஐ நா மன்றப் பொதுச் செயலாளரும் வரவேற்றிருக்கிறார் ஆனால் இங்குள்ள சிலர் ஈழத் தமிழர்களுக்காகக் கண்ணீர் வடிக்கின்றனர் யாழ்ப்பாணத்திலே தமிழர் விழாக் கொண்டாடி பாரதப் பிரதமருக்கும் தமிழக முதல்வருக்கும் வாழ்த்துக் கூறியிருக்கின்றனர்.

ஈழப் போராளிகள் நிராயுத பாணிகளாக்கப் பட்டுள்ளனர். அவர்கள் சம்மதத்தோடு! ஆனால் ஈழப்பிரதேசம் நிராயுத பாணியாகி விடவில்லை. அதனைப் பாதுகாக்க இந்திய ராணுவம் ஆயுத மேந்தியிருக்கிறது. இலங்கையின் வடக்கு- கிழக்குப் பகுதியிலே;

இலங்கையைச் சுற்றியுள்ள கடற்பிரதேசத்திலேயும் இந்தியாவின் போர்க்கப்பல்கள் கண்காணித்து நிற்கின்றன

ஈழப்பிரதேசத்திலிருந்த சிங்கள ராணுவத்தினரை அங்கிருந்து வெளியேற்றி விட்டனர் அங்கிருந்த இந்திய ராணுவ வீரர்கள்

ஈழத்திலேநிராயுதபாணியாகயிருப்பது அதிபர் ஜெயவர்த்தனே தான். அதுவும், தாமே விரும்பித்தான்.

சுதந்திர நாளைக் கொண்டாடும் இந்த நல்ல நேரத்திலே இந்திய தமிழருக்குச் சொல்கிறேன் ஈழப் பிரதேசம் இலங்கைராணுவத்திடம இல்லை இந்திய ராணுவத்திடம்தான் இருக்கிறது இதற்காக ஈழத் தமிழர்கள் மகிழ்ச்சியடைகின்றனர் நாமும் மகிழ்ச்சியடைவோமாக!

இலங்கையிலிருந்துபிரிந்து வாழும்தனிஈழநாடுகோரிய போராளிகள் இன்று தனி ஈழமாநிலத்தை ஏற்றது அவர்களுடைய தேசப் பற்றைக் காட்டுகிறதென்றால் அறிஞர் அண்ணா கூட தனிநாடு கேட்டு, பின்னர் தனிமாநிலம்கிடைத்த போது பிரிவினையைக் கைவிட்டு தமிழ் மாநிலத்தில் ஆட்சிக்கு வரவில்லையா! அது அவருக்கிருந்த தேசபக்தியால் தான்!

நாற்பதாண்டுகளுக்கு முன்பு பாரதம் சுதந்திரம் பெற்றது அதையடுத்து முப்பது ஆண்டுகளுக்கு முன்பு தமிழகம் தனியரசு மாநிலமானது அதற்கிடையில் பத்தாண்டுகளுக்கு முன்பு ராஜீவ் காந்தி போற்றும் ராஜதந்திரியான டாக்டர் எம் ஜி ஆரின் ஆட்சி தோன்றியது தமிழகம் தனியரசு மாநிலமாகாதிருந்தால் ஈழத்தமிழர் இலங்கையிலேயும் ஒரு தமிழ் மாநிலத்தைப் படைத்துத்தர எம் ஜி ஆரால் முடிந்திருக்காது.

ஆகவே தமிழகத்தையும் சேர்த்து பாரதம் முழுவதற்கும் விடுதலைதேடிய தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்துவோம்

சுதந்திர இந்தியாவிலே பல எதிர்ப்புகளையும் சமாளித்து தடைவாதங்களைத் தகர்த்தெறிந்து தமிழகத்தில் தமிழரசு கண்டவர்களுக்கும் வாழ்த்து கூறுவோம்.

இந்த நேரத்திலே அமெரிக்காவிலே உடல் [illegible] அரசு பர்சோதனைக்காக சென்டர் எம். ஜி ஆருக்கும் [illegible] நுள்ள ராஜதந்திரியாக வாழ்த்துக் கூறுவோம்

# தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம்












இலங்கைத் தமிழர்களின்
இன்னல்கள் நீங்கிட
இனியதொரு ஒப்பந்தம்
கண்டுள்ள இந்நாளில்
சுதந்திரம் பெற்ற
சுந்தரத் திருநாளில்
சூளுரை கொள்கிறது
குடிநீர் வாரியம்.
அனைவருக்கும்
பாதுகாக்கப்பட்ட குடிநீர்
வழங்குவதே
எங்கள் குறிக்கோள்.



எஸ்.டி. உகம்சந்த், பி.எஸ்ஸி.,
தலைவர்

DIPR/1923/MS/87/CHHAYA

# அண்ணா நாளிதழ் வழங்கும்

# ★ புதுவை மாநில சுதந்திரதின சிறப்புமலர் ★

## புதுவையின் பொற்காலத்தைப் படைப்போம்

எம். ஓ. எச். பாருக் (புதுவை மாநில முதலமைச்சர்)

அண்ணல் மகாத்மா காந்தியடிகள், பண்டித ஜவகர்லால் நேரு பாபு இராஜேந்திரப் பிரசாத் போன்ற அரும் பெரும் தலைவர்கள் தம் வாழ்வினைத் தியாகம் செய்து வாங்கிக் கொடுத்த சுதந்திரத்தை இன்று நாம் அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். இந்தியாவின் 40வது சுதந்திரதினத்தை கொண்டாடும் எல்லா புதுவை மாநில மக்களுக்கும் என் இதயம் நிறைந்த வாழ்த்துக்களை உரித்தாக்குகின்றேன்.

நவபாரதம் இன்று நல்லதோர் வளர்ச்சிப் பாதையில் நடைபோட்டுக் கொண்டிருக்கிறது அந்தப் பாதைக்கு வழி வகுத்துக் கொடுத்த பண்டித ஜவகர்லால் நேருவின் பிறந்த நாள் நூற்றாண்டு விழாவினை நாம் கொண்டாடுகிறோம். இந்திய ஒருமைப்பாட்டுக்கும் ஒற்றுமை உணர்வுக்கும் நேரு ஆற்றிய தொண்டுகள் பற்பல. ஆசியாவின் சமாதானச் சிற்பியாகத் திகழ்ந்த அந்த உத்தமரின் வழியில் நாட்டுக்குச் சேவை செய்து தம் வாழ்நாளைச் செலவிட்டார் அமரர் அன்னை இந்திரா அவர்கள் அந்தத் தலைவி விட்டுச்சென்ற பணிகளையும் அவரின் எண்ணங்களையும் நிறைவேற்றிட அல்லும் பகலும் அயராது உழைத்து வருகிறார் நமது உத்தமத் தலைவர் பாரதப் பிரதமர் மாண்புமிகு ராஜீவ்காந்தி அவர்கள் அவரின் எதிர்பார்ப்புகளை நிறைவேற்றுவது நம்முடைய முதற் கடமையாகும்.

ஏழாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கென நம் மாநிலத்திற்கு நாம் பெற்ற ஒதுக்கீடு ரூபாய் 170 கோடியாகும் இவ்வாண்டில் ரூபாய் 47 கோடி வளர்ச்சி பணிகளுக்காகச் செலவிடப்படுகிறது

இருபது அம்சத்திட்டத்தின் வாயிலாக்கத்தில் இந்த அரசு தனிப்பட்ட கவனத்தைச் செலுத்தி வருகிறது ஏழை எளியவரின் ஒளி விளக்காகத் திகழும் இருபது அம்சத்திட்ட அமலாக்கத்தல் கடந்த ஆண்டுகளில் பல்வேறு அம்சங்களில் இந்த மாநிலம் குறியீடுகளை அடைந்துள்ளது மேலும் சில அம்சங்களில் அனைத்திந்திய அளவில் குறியீடுகளை விஞ்சிய சாதனைகள் நிகழ்த்தப்பட்டிருக்கின்றன என் தலைமையில் இயங்கி வரும் மாநில அளவிலான ஓர் உயர்மட்டக்குழு அமலாக்கத்தினைக் கண்காணித்து வருகிறது

வேளாண் வளர்ச்சியில் புதுவை மாநிலம் நல்ல வளர்ச்சியைக் கண்டிருக்கிறது உணவு தானிய உற்பத்தி 1,35 000 டன் என்ற அளவுக்கு உயர்த்தப்படும். ஒரு எக்டேரில் ஆறுடன் நெல் விளைச்சலை உற்பத்திசெய்ய முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன பருத்தி உற்பத்தியை 15,000 பேல்களாக உயர்த்திட முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன வேளாண் சேவைகளை உழவர்களுக்கு உடனுக்குடன் வழங்கிட வேளாண் சேவைக்கழகம் துவக்கப்பட்டுள்ளது கல்வியில் ஒரு நிலையான வளர்ச்சியை நமது மாநிலம் பெற்றிருக்கிறது புதுவையின் பெருமைக்கு பெருமை சேர்க்கும் வண்ணம் புதுவைப் பல்கலைக்கழகம் 16-10-85 அன்று தொடங்கப்பட்டு இன்று பல்வேறு பாடப்பிரிவுகளையும் ஆராய்ச்சிவகுப்புகளையும் துவக்கியுள்ளது. பாரதப் பிரதமரின் புதிய கல்விக் கொள்கைக்கு இப்பல்கலைக் கழகம் பல்வேறு ஆக்கபூர்வமான நடவடிக்கைகளை மேற்கொள்ளுகிறது புதுவைப் பொறியியல் கல்லூரி ஒரு சிறந்த இடத்தைப் பெற்றிருக்கிறது சிறந்த பொறியியல் பட்டதாரிகளை உருவாக்கி வழங்கவிருக்கிறது வேளாண் கல்லூரி ஒன்று நமது மாநிலத்தில் விரைவில் மலரவிருக்கிறது

நல வழிச் சேவைகளில்

8ப் பக்கம் பார்க்க

## புதுவை முதல்வர் வாழ்த்துச் செய்தி

எம். ஓ. எச். பாருக்
முதலமைச்சர்

பாண்டிச்சேரி
தேதி: 14-8 87

பாரத பூமியின் 40 ஆவது சுதந்திரத் திருநாளையும் பண்டித ஜவகர்லால் நேரு அவர்களின் நூறாவது பிறந்தநாள் விழாவையும் கொண்டாடும் புதுவை மாநில மக்களுக்கு என் இதயம் நிறைந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

புதுவைமுழு அதிகார மாற்றம் பெற்றவெள்ளி விழா ஆண்டினை நாம் கொண்டாடுகிறோம் இந்த 25 ஆண்டுகளில் நமது மாநிலம் பலவேறு வளர்ச்சிகளைக் கண்டிருக்கிறது இன்று நாம் முன்னணிப் பாதையில் பீடுநடை போடுகிறோம் இதற்கு காரணம் பண்டித ஜவஹர்லால் நேருவும் மாநிலத்தின் மீது கொண்ட தனி அக்கறையும் அன்னார் ஆகும் அவர் காட்டிய வழியில் நம் மாநிலத்தின் வளர்ச்சியில் தனிக்கவனம் செலுத்தியவர் அமரர் அன்னை இந்திரா அவர்கள் இன்று இந்த மாநிலத்திற்கென்று ஒரு மத்தியப் பல்கலைக்கழகம் ஒரு பொறியியல் கல்லூரி ஒரு விளையாட்டு வளாகம் முதலானவை அமைத்திடவும் மூடிக்கிடந்த ரோடியர் ஆலையைத் திறந்திடவும் வழிவகை செய்தவர் நமது இளைய தலைவர் பாரத பிரதமர் மாண்புமிகு திரு. ராஜீவ் காந்தி அவர்கள் அண்மையில் அவர் தமிழர்களுக்காக உருவாக்கிய ஓர் ஒப்பந்தம் தமிழ் மக்களின் மீது அவருக்கு இருக்கும் பெருமதிப்பைக் காட்டுகிறது அவரின் நல்லெண்ணப் பணிகளுக்கு நாம் ஒத்துழைப்பது நமது கடமையாகும்!

இந்த நன்னாளில் உங்கள் ஒவ்வொருவர் வாழ்விலும் எல்லா நலனும் வாய்க்க வேண்டுமென இறைவனை வேண்டுகிறேன்

## வல்லரசுகளை வாயடைக்கவைத்த சிறப்பான ஒப்பந்தம்

புதுவை விவசாய அமைச்சர் கோவிந்தராஜன் விடுத்துள்ள அறிக்கையில் குறிப்பிட்டுள்ளதாவது:-

அடிமைத் தளையறுத்து சுதந்திரம் நிலவிய நன்னாளே ஆகஸ்ட் 15 இன்றைக்கு 40 வருடங்களுக்கு முன்பு நாம் அன்னியரின் அடக்குமுறையிலிருந்து விடுதலைபெற்று சுதந்திரக்காற்றை சுவாசிக்க ஆரம்பித்தோம் 40-வது சுதந்திர ஆண்டு நிறைவினை நாமெங்கும் சிறப்பாகக் கொண்டாடிக் கொண்டிருக்கும் இந்த வேளையில் நமது இந்திய நாடு எந்த அளவு முன்னேறியிருக்கிறது என்று யோசித்துப் பார்க்கும் நிலையில் இருக்கிறோம்

விவசாயத் துறையில் தன்னிறைவு அடைந்துள்ளோம் தொழில்துறையில் மிகவேகமாக முன்னேறி வந்துள்ளோம் கல்வித் துறையில் புதுமையான கணிப்பொறி வல்லுமைகளை உபயோகப்படுத்தும் அளவிற்கு உயர்ந்துள்ளோம்

விஞ்ஞானத்தில் அணுசக்தியினை ஆக்கபூர்வமாகப் பயன்படுத்தும் அளவிற்கு சிறந்துள்ளோம் மொத்தத்தில் வல்லரசுகளும் அண்டை நாடுகளும் நமது முன்னேற்றத்தையும் உயர்வையும் கண்டு வியக்கின்றன

அதனால் அவர்கள் நமது புனித நாட்டில் தீவிரவாதியால் ஊடுருவி ஊறு விளைத்திட சதித்திட்டங்கள் தீட்டுகிறார்கள் பல்வேறு கலாச்சாரமும் பண்பாடும் மிக்க இப் புனித பூமியின் ஒற்றுமைக்கும் ஒருமைப்பாட்டிற்கும் எதிர்ப்புகளை உண்டாக்கிட நினைக்கிறார்கள். இன்றைக்கு நாம் அனுபவித்திடும் சுதந்திரம் சாதாரணமாக கிடைத்

8ப் பக்கம் பார்க்க

## புதுவை அரசு அட்டவணை இனத்தவர் நலத்துறை

அட்டவணை இனத்தவர் தம் சமூக, பொருளாதார மற்றும் கல்வி நிலைகளில் அடைந்துள்ள மறுமலர்ச்சியை பாரீர்; புதுவை இந்திய யூனியனுடன் இணைந்து முதல் ஏழு கோடி செலவீட்டில் ஈட்டியுள்ள சாதனையை பாரீர்!

| செயல் திட்டங்கள் | பயனடைந்தோர் எண்ணிக்கை |
|---|---|
| ★ வீட்டு மனைகள் வழங்குதல் | 6540 மனை பட்டாக்கள் |
| ★ மலிவு விலை வீடுகள் வழங்குதல் | 1459 மலிவு விலை வீடுகள் |
| ★ மலிவு விலை வீடுகள் கட்டமைக்க ரூ. 2,500/- மானியமாக வழங்குதல் | 2258 நபர்கள் |
| ★ கலப்பு மணம் புரிந்து கொண்ட தம்பதிகளுக்கு ரூ. 5000/- ஊக்கப் பரிசு அளித்தல் | 66 தம்பதிகள் |
| ★ இறந்தவர் உடலை அடக்கம் செய்வதற்காக ரூ. 100/- நிதி உதவி வழங்குதல் | 1804 நபர்கள் |
| ★ கொடிய நோயினால் பீடிக்கப்பட்டு அவதியுறுவோருக்கு நிதி உதவி | 46 நபர்கள் |
| ★ இல்லங்களை சுத்தமாக பராமரிப்போருக்கு மகாத்மா காந்தி நினைவு பரிசு | 150 நபர்கள் |
| ★ சட்டம் மற்றும் மருத்துவம் பயின்ற பட்டதாரிகள் தானே தொழில் செய்ய நிதி உதவி | 4 பட்டதாரிகள் |
| ★ ஆரம்பப் பள்ளி மாணவர்களுக்கு புத்தகம், எழுது பொருள் மற்றும் இரு ஜோடி சீருடைகள் ஆண்டு தோறும் வழங்குதல் | 14,000 மாணவர்கள் |
| ★ விடுதிகளை திறத்தல் மற்றும் பராமரித்தல் | 18 விடுதிகள் 2000 மாணவர்கள் |
| ★ விடுதி மாணவர்களுக்கு ஆண்டு தோறும் இரு ஜோடி சீருடைகள் வழங்குதல் | 2000 மாணவர்கள் |
| ★ 6 ஆம் வகுப்பு முதல் 10 ஆம் வகுப்பு வரை பயிலும் மாணவ மாணவியருக்கு படிப்புதவித் தொகை வழங்குதல் | 76,000 மாணவர்கள் |
| ★ மேல்நிலைப் பள்ளி மற்றும் கல்லூரிகளில் படிப்போருக்கு படிப்புதவித் தொகை வழங்குதல் | 5800 மாணவர்கள் |
| ★ சிறப்பு போதனா வசதி அளித்தல் | 16,000 மாணவர்கள் |
| ★ தொழில் பயிற்சி மையங்களில் பயிற்சி பெறும் மாணவ, மாணவியருக்கு பயிற்சி கால உதவித் தொகை வழங்குதல் | 519 மாணவர்கள் |
| ★ 6 ஆம் வகுப்பிலிருந்து 10 ஆம் வகுப்பு வரை பயிலும் மாணவியரின் பெற்றோர்களுக்கு வாய்ப்பு ஊதியம் வழங்குதல் | 3097 நபர்கள் |
| ★ பொறியியல், மருத்துவம் மற்றும் இதர தொழில் கல்வி பயிலும் மாணவ, மாணவியருக்கு கூடுதல் பராமரிப்பு தொகை வழங்குதல் | 45 மாணவர்கள் |
| ★ விடுதிக்காக கட்டப்பட்டுள்ள கட்டிடங்கள் | 7 விடுதிகள் |
| ★ பெட்டிக்கடை, தையல்கடை, தேநீர் கடை மற்றும் தோல் தொழில் செய்யும் கடைகள் அமைக்க நிதி உதவி அளித்தல் | 864 நபர்கள் |
| ★ சமுதாய நலக்கூடங்கள் கட்டுதல் | 63 கூடங்கள் |
| ★ துப்புரவு தொழில் புரிவோருக்கு வீடுகள் கட்டுதல் | 45 வீடுகள் |
| ★ நீர் வசதியுடன் கூடிய கழிப்பறைகள் கட்டுதல் | 45 கழிப்பறைகள் |
| ★ அட்டவணை இனத்தவர் மேம்பாட்டுக் கழகம் அமைத்தல் | 1 |

அட்டவணை இனத்தவர் நலத்துறை

புதுவை

## சிறப்பான ஒப்பந்தம்...

அப் பக்கத் தொடர்ச்சி

தது அல்ல பல தியாகிகளின் உடல், பொருள், ஆவி அனைத்தையும் ஈந்து பெறப்பட்டது.

எத்தனையோ அன்னிய அடக்குமுறைகளை சந்தித்து சாதிக்கப்பட்டது அந்த கொடுமைகள இழப்புக்களை வளர்ந்து வரும் இந்த இளைய தலைமுறை நன்கு உணரவேண்டும் அப்போதுதான நமது சுதந்திரத்தின் பெருமையையும் உயர்வையும் அவர்கள் உணர்வார்கள்

இன்னுயிர் ஈந்த தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தவும் இன்றைய இளைய தலைமுறை இந்திய சுதந்திர வரலாற்றினை உணர்ந்திடவும் இந்த 40வது சுதந்திர தினம் இத்தனை சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

நமது காங்கிரஸ் பேரியக்கத்தினை கட்டிக்காத்திட்ட காந்திஜி, நேருஜி, ராஜாஜி, சத்தியமூர்த்தி, காமராஜ், சிதம்பரனார், மகாகவி பாரதியார், பட்டேல், சுபாஷ், இந்திராஜி இவர்கள் வழியில் இன்று "இலங்கை கொண்டான்" எனும் பெரும்பேர் பெற்று "விஞ்ஞானயுக இராமனாக" ராஜீவ்காந்தி தீர்க்க தரிசனத்துடனும், திண்மையான கருத்துடனும், திடமான செயல்திறனுடனும் நம்மை வழி நடத்திச் செல்கிறார். அவர் இந்த சுதந்திர இந்தியாவின் சிறப்புகளையும் பெருமைபெற்ற மாண்பினையும் காத்திட ஒவ்வொரு நாளும் போராடுகிறார்.

அத்தகு போராட்டத்தின் ஒருகட்டமே இலங்கை ஒப்பந்தம்,

இலங்கை ஒப்பந்தம் வல்லரசு நாடுகளை வாயடைத்திட வைத்துள்ளது. இன்றும் சாதனை புரிய இந்தியா துடித்து நிற்கிறது. ஆகவே இந்நன் நாளில் பெரும் சபதம் ஏற்போம்: இன்னுயிர் துறந்து பெற்ற இவ்வினிய சுதந்திரத்தை இனிது உயர்த்திட ஒன்றுபட்டு ஒருமைப்பாட்டுடனை காத்திட இந்திய பிரதமர் ராஜீவ்காந்திக்கு என்றும் துணிந்து துணை நிற்போம் இன்னுயிர் ஈந்த தியாகிகளை இதயத்தில் நிறுத்துவோம்!

இவ்வாறு விவசாய அமைச்சர் கோவிந்தராஜன் தெரிவித்துள்ளார்.

## பொற்காலத்தைப் படைப்போம்..

[அப் பக்கத் தொடர்ச்சி]

புதுவை ஒரு நல்ல இடத்தைப் பெற்றிருக்கிறது. இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் 'அனைவருக்கும் சுகாதாரம்' என்பதை உறுதி செய்வதில் புதுவை மாநில ஒரு வலுவான வளர்ச்சியை ஏற்படுத்தி இருக்கிறது.

புதுவையில் மருத்துவ வசதி வேண்டும் ஒருவர் இரண்டு கிலோ மீட்டருக்குள் மருத்துவ வசதியைப் பெற்று விடுகிறார் புதுவையில் தனி நபருக்கு ஆகும் மருத்துவச் செலவு ரூபாய் 170 என்பது குறிப்பிடத்தக்கது.

புதுவை மாநிலத்தில் உள்ள எல்லா கிராமங்களுக்கும் மின் வசதி அளிக்கப்பட்டு விட்டது. குடிசைக்கோர் மின்விளக்குத் திட்டத்தின் கீழ் 6400 க்கும் மேற்பட்ட குடிசைகளுக்கு மின் இணைப்பு வழங்கப்பட்டுள்ளது சிறுவிவசாயிகளுக்கும் குடிசைக்கோர் மின்விளக்கு திட்டத்தின் கீழ் உள்ள குடிசை வாழ் மக்களுக்கும் இலவச மின்சாரம் 1985 ஏப்ரல் முதல் வழங்கப்பட்டது. சிறு விவசாயிகளைத் தவிர மற்ற அனைத்து விவசாயிகளுக்கும் குதிரைத் திறனுக்கு ஏற்றவாறு வரையறுக்கப்பட்ட மின் கட்டணம் அமலுக்குக் கொண்டு வரப்பட்டது.

கால்நடைப் பராமரிப்பு புதுவை மாநிலத்தில் நன்முறையில் நடைபெறுகிறது நாள்முழுதும் மருத்துவ வசதி அளிக்கக் கூடிய "பலநோக்கு மருத்துவ மனை" புதுவையில் தொடங்கப்பட்டிருக்கிறது தீவிர கோழி வளர்ப்புத் திட்டத்திற்குப் பல்வேறு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன நடமாடும் செயற்கைகருவூட்டத்தின் மூன்றாவது பிரிவு தொடங்கப்பட்டுள்ளது இருபது அம்ச திட்டத்தின் கீழ் வாத்துப்பண்ணை கோழிப் பண்ணை, ஆடுவளர்ப்பு மற்றும் முயல்வளர்ப்பு திட்டங்களுக்கும் கடன் மற்றும் மான்யம் வழங்கப்படுகிறது புதுவையிலும் காரைக்காலிலும் மனவிலங்குச் சட்டம் தீவிரமாக செயல்படுத்தப்படுகிறது

மீனவர் காப்பீட்டுத் திட்டத்தின்கீழ் 11,500பேர் கொண்டு வரப்பட்டுள்ளனர். மரணம் அடைந்த மூன்று மீனவக் குடும்பங்களுக்குத் தலா ரூபாய் 15,000 வழங்கப்பட்டுள்ளது 711 மீனவர்களுக்குத் தலா ரூபாய் 2500 வீதம் வீடுகட்டிக் கொள்ள மான்யம் வழங்கப்பட்டுள்ளது மீன் விற்பனைக்கு குறைந்த வாடகையில் போக்குவரத்து வசதி அளிக்கப்பட்டுள்ளது மீன்பிடி துறைமுகம் விரைவில் செயல்பட உள்ளது.

வறுமைக் கோட்டிற்குக் கீழ் உள்ள 5,500-க்கும் மேற்பட்ட குடும்பங்களுக்கு உதவியளிக்கப்பட்டது 'இந்திரா' அவாஸ் யோஜனா திட்டத்தின் கீழ் அட்டவணை இனத்தவருக்கு 170 வீடுகள் கட்டும் பணி தொடங்கப்பட்டுள்ளது நவீன அடுப்பு செயல்விளக்கத் திட்டத்தின் கீழ் 19 கிராமங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு 335 பெண்கள் பயிற்சி பெற்றனர். இதில் இந்திய அளவில் மூன்றாம் பரிசும் மாநில அளவில் முதல் பரிசும் கிடைத்தன. சமுதாய வளர்ச்சித் திட்டத்தின்கீழ் 45 இடங்களில் தொலைக்காட்சிப் பெட்டிகள் அமைக்கப்பட்டுள்ளன தேசிய வன வளர்ப்புத் திட்டத்தின் கீழ் 1,85,000 பழம் தரும் மரக்கன்றுகள் நடப்பட்டுள்ளன

சுற்றுலாத் துறையைத் தொழில் நோக்கில் எடுத்துக்கொண்டு புதுவை சுற்றுலா வளர்ச்சிக் கழகம் ஏற்படுத்தப்பட்டுள்ளது அட்டவணை இனத்தவர் நலத்தை உயர்த்த அட்டவணை இனத்தவர் வளர்ச்சிக் கழகம் அமைக்கப்பட்டுள்ளது

இந்த அரசு ஆட்சிப் பொறுப்பேற்று கொண்ட பின் மக்களுக்காக ஆற்றும் பணிகள் பலப்பல இந்தப் பணிகளை வெற்றிகரமாக நடத்திடக் காரணம் புதுவை மக்கள் எங்களுக்குத் தரும் இதயபூர்வமான ஊக்கமும் ஆக்கமும்தான் வருகின்ற இருபத்தோராம் நூற்றாண்டு இந்தியாவை உருவாக்கும் பணியில் நமது மாநிலம் தனது பங்கை ஆற்றும் எனக் கூறிக் கொள்ள விழையும் இந்நேரத்தில் அதற்கான உங்களது மனமார்ந்த ஒத்துழைப்பை நல்குவீர் என்று இரு கரம் கூப்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்

ஜெய் ஹிந்த்!

புதுவை மாநிலத்தில் தரக்கட்டுப்பாடுக்கு முக்கியத்துவம் தரப்படுகிறது. தரக்கட்டுப்பாடு குறித்த கருத்தரங்கில் அமைச்சர் வைத்தியநாதன்.

## சபதம் ஏற்போம்...

### பி. கே. லோகநாதன் எம்.எல்.ஏ.

புதுவை சட்டமன்ற எதிர்கட்சித் தலைவர்

தாய்நாட்டின் அடிமை விலங்கொடித்த வீரத் தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தி அவர்கள் தொவித்த லட்சிய கோட்பாடுகளை பின்பற்றுவோம் என புதுவைமாநில கழக செயலாளர் பி கே லோகநாதன் தெரிவித்துள்ளார்.

நாடெங்கும் 40வது சுதந்திர தினம் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது

அடிமை விலங்கொடிக்க நடந்த தீரமிக்கப் போராட்டத்தில் ஈடுபட்ட சுதந்திர போராட்ட தியாகிகளுக்கு ஏற்பட்ட அடக்குமுறைகளும் சித்திரவதைகளும் ஏராளம்

துப்பாக்கிக் குண்டுகளுக்கு அஞ்சாமல் சூரியன் அஸ்தமிக்காத சாம்ராஜ்யத்திற்கு சொந்தக்காரர்கள் என கூறப்பட்ட இங்கிலாந்து சாம்ராஜ்யத்தை எதிர்த்து போரிட்டு சுதந்திரம் பெற்றுத் தந்த வீரத் தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்துகிறோம

சுதந்திர போராட்ட வீரர்களுக்கு இங்கிலாந்து அரசு விலை வைத்து வேட்டையாடியது.

அந்த கால கட்டத்தில் இந்திய விடுதலைக்குப் போராடிய தியாகிகளுக்கு அடைக்கலம் அளித்தது பாண்டிச்சேரி ஆகும்

ஆகவே இந்திய சுதந்திரப் போராட்ட வரலாற்றில் புதுவை முக்கிய பங்கு வகிக்கிறது என்பதில் சந்தேகமில்லை

இந்தியாவோடு புதுவை மாநிலம் இணைந்த வெற்றி விழா ஆண்டும் 40 வது சுதந்திர தின விழாவோடு இணைவது விசேஷமாகும்

அதோடுமட்டுமல்லாமல் ஆண்டாண்டு காலமாய் அல்லலுற்று கிடந்த ஈழத் தமிழர்களின் வாழ்வில் மறுமலர்ச்சி ஏற்பட்டுள்ளது

இதற்காக தீவிர முயற்சிகளை மேற்கொண்ட பிரதமர் ராஜீவ் காந்திக்கும் தமிழக முதல்வர் புரட்சித்தலைவருக்கும் நாமே நன்றி செலுத்துகிறது

இந்தியத் துணைக் கண்டத்திற்கு பட்டமிலாத ஆசிய பிராந்தியத்தில் பதட்டநிலை தணிய இலங்கை இந்திய ஒப்பந்தம் வழிகோலியுள்ளது

இலங்கையில் ஈழத் தமிழர்களுக்கு தனி மாநிலம் அமைய வழி கண்ட பிரதமர் ராஜீவ் அவர்களுக்கும் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களுக்கும் புதுவை மக்களும் தங்கள் நன்றியை தெரிவித்துக் கொள்கிறார்கள்,

சமாதான ஒப்பந்தத்தில் கையெழுத்திடச் சென்ற நேரத்தில் பிரதமர் ராஜீவ் காந்தி மீது நடந்த தாக்குதல் நமக்கெல்லாம் பேரதிர்ச்சியை ஏற்படுத்தியது.

சமாதானத்திற்கும் ஒற்றுமைக்கும் எதிராக பிற்போக்கு சக்திகள் நடத்தி வரும் தாக்குதலின் ஒரு பகுதியே பிரதமர் ராஜீவைக் கொல்ல நடந்த சதியாகும்.

நாட்டில் வன்முறை சக்திகளுக்கு ஒரு போதும் இடம் கொடுக்கமாட்டோம் என்ற சபதத்தை இந்நன்னாளில் ஏற்போம்.

புதுவை அரசின் சுற்றுலாத் துறை சுற்றுலா தலங்களுக்கு சிறப்பு பஸ்களை விடுகிறது.





# ஒளிமயமான பாதையில் புதுவை மாநிலம்






- வளர்ச்சியை நோக்கிய பீடுநடை, மக்களின் நலனில் முழு ஈடுபாடு
- வாக்குறுதிகளை நிறைவேற்றுவதே முதன்மைக் குறிக்கோள்
- மக்களின் சமூகப்பொருளாதார வளர்ச்சியை உயர்த்துவதே முக்கிய நோக்கம்
- வறுமைக் கோட்டிற்குக் கீழ் உள்ளவர்களின்வாழ்வுக்கு வளம் சேர்க்கும் வளர்ச்சிப் பணிகள்
- சவால்களை சந்தித்து சாதனைகளை படைப்பதில் வெற்றி

---

★ வேளாண் உற்பத்தியைப் பெருக்க பல்வேறு விரிவாக்கப் பணிகள்.

★ புதிய கல்விக் கொள்கையை அமல் படுத்த பல்வேறு புதுமையான திட்டங்கள்.

★ ஆரம்பப்பள்ளி ஏழைமாணவர்களுக்குஇலவசமதியஉணவு

★ நாட்டுறவை மேம்படுத்தும் கூட்டுறவுச் சேவைப் பணிகள்

★ தொழில் ஆர்வலர்களை ஊக்குவிக்கும் பல்வேறு கவர்ச்சிகரமான ஊக்குவிப்புகள்

★ பல்வேறு புதிய திட்டங்களை பாங்குடன் நடத்திட மாவட்டத் தொழில் மையத்தின் ஆலோசனைகள்

★ குடும்ப நலத்திட்டம் ஒரு மக்கள் இயக்கம்

★ ஆதிதிராவிடர் இனத்தவர் வாழ்வை மேம்படுத்த ஆதிதிராவிடர் இனத்தவர் வளர்ச்சிக் கழகம்

★ சமூகத்தில் உள்ள அனைவரும் சமம் என்பதை நிலை நாட்டும் சமூக நலப்பணிகள்.

★ கூடுதல் நியாயவிலைக் கடைகள் மூலம் உணவுப் பண்டங்களின் ஒரு சீரான விநியோக முறை.

★ குடிசை வாழ் மக்களுக்கும் சிறு விவசாயிகளுக்கும் இலவச மின்சாரம்.

★ மீனவர்களின் வளம் நிறைந்த வாழ்வுக்கான மேம்பாட்டுப்பணிகள்

★ புதுவையை சுந்தர பூமியாக மாற்றும் புதுமையான சுற்றுலா வளர்ச்சிப்பணிகள்.

★ கிராமப்புற மக்கள் தேசிய நிகழ்ச்சிகளைக் கண்டுகளிக்க கிராமம் தோறும் வண்ணத் தொலைக்காட்சிப் பெட்டிகள்

---

## இன்னும்

∴ பாரதப் பிரதமரின் புதிய கல்விக் கொள்கையைப் பிரதிபலிக்கும் புதுவைப் பல்கலைக்கழகம்

∴ பொறியியல் பட்டதாரிகளை நாட்டுக்கு வழங்கவிருக்கும் புதுவை பொறியியல் கல்லூரி

∴ இளைஞர்களின் கனவை நனவாக்கிட வெகு விரைவில் வரவிருக்கும் விளையாட்டு வளாகம்

**மக்களின் தேவைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றுவதே**

**இவ்வரசின் முதன்மையான நோக்கம்**

இவை மட்டுமல்ல

**வளர்ச்சிப்பணிகளின் பட்டியல் இன்னும் வளரும்!**

★ புதுவைக்கு நெய்வேலியிலிருந்து நேரடியாக நிலையான மின்சாரம் ★ புதுவைக்கு விரைவில் விமான தளம்

வெளியீடு : செய்தி மற்றும் விளம்பரத்துறை புதுவை அரசு



# தமிழ்நாடு செய்தித்தாள் மற்றும் காகித நிறுவனத்தின் சூழற்சியால் காகித உலகில் மாபெரும் புரட்சி உருவாகி விட்டது



தமிழ்நாடு காகித நிறுவனம், செய்தித்தாள் மற்றும் காகித தொழிலில் அளவிட முடியாத பெரும மாற்றத்தையே ஏற்படுத்தி இருக்கிறது. சாத்தியமில்லாத எண்ணங்களுடன் தொடங்கப் பெற்ற இந்த நிறுவனம் இன்று செய்தித்தாள மற்றும் காகித உற்பத்தித்துறையில் இலாபகரமாக ஓடிக்கொண்டிருக்கும் மாபெரும் தொழில் நிறுவனமாக வெற்றி நடைபோடுகிறது. நூறு சதவீதம் கரும்புச்சக்கையின் மூலம் செய்தித்தாள் தயாரிப்பில், தமிழ்நாடு செய்தித்தாள் மற்றும் காகித நிறுவனம்தான் உலகிலேயே முதலிடம் வகிக்கிறது. அதன் உற்பத்தியோ ஈடு இணையில்லாத உயர்தரம். தமிழ்நாடு செய்தித்தாள் மற்றும் காகித நிறுவனத்தில் தயாரான காகிதம், உலகிலுள்ள மற்ற ஏனைய உயர்தரமான காகிதத்தோடு ஒப்பிடும் அளவில் சிறந்தவையாக இருக்கின்றது.

வழக்கமாக காகித உற்பத்திக்குப் பயன்படுத்தப்படும் மர வகைகள் அல்லாமல் வெறும் கரும்புச்சக்கையின் மூலம் காகிதம் தயாரிக்க இயலும் என்பதில் பெருத்த சந்தேகம் இருந்தது. கரும்புச்சக்கை என்பது கரும்புச்சாறு பிழிந்தெடுத்த பிறகு மிஞ்சியிருப்பதே. இந்த விதமான கரும்புச்சக்கையிலிருந்து காகிதம் தயாரிப்பதில் இந்நிறுவனம் முன்னோடியாக காலடி வைத்த பின்பு மரக்கலவையில்லாத முறையில் காகிதத் தயாரிப்பில் கரும்புச்சக்கை இலாபகரமாகப் பயன்படத் துவங்கியது.

ஒரு ஆண்டில் ஒரு இலட்சம் டன்கள் வரை செய்தித்தாள் மற்றும் காகிதப் பொருள்களை இன்று இந்த நிறுவனம் விநியோகம் செய்து வருகிறது. நீங்கள் படிக்கும் தினசரி செய்தித்தாள்களும், நீங்கள் எழுத உபயோகிக்கும் காகிதங்களும் இந்நிறுவனத்தின் மூலம் கிடைக்கப்பெறுபவையே. நாட்டிலுள்ள நான்கு காகித ஆலைகளிலேயே தமிழ்நாடு செய்தித்தாள் மற்றும் காகித நிறுவனம்தான் தனது உற்பத்தியில் மாற்று மூலப்பொருளையே அடிப்படையாகக் கொண்டது. காகித உற்பத்தியோடு மட்டும் தன் பணி முடிந்துவிடவில்லை என்று உணர்ந்து தன் சீரிய பணியை மேலும் விரிவாக்குகிறது தமிழ்நாடு செய்தித்தாள் மற்றும் காகித நிறுவனம்.

இந்நிறுவனத்தின் தொடர்ச்சியான சிறந்த முன்னேற்றத்தின் இரகசியம், சுற்றுப்புற சூழலை கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பதும், கழிவுப் பொருட்களை மீண்டும் உபயோகப் படுத்தும் விதமுமே ஆகும்.

கரும்புச்சக்கையின் மூலம் காகிதத் தயாரிப்பில் இந்நிறுவனம் வெற்றி பெற்றது ஏனைய செய்தித்தாள் மற்றும் காகித உற்பத்தித் தொழிற்சாலைகளுக்கு ஊக்கத்தை அளித்து வருகிறது. தமிழ்நாடு அரசின் உதவியினால் நிறுவப்பட்டதும், மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் எம்.ஜி.ஆர். அவர்களால் நாட்டிற்கு அர்ப்பணம் செய்யப்பட்டதுமான இந்நிறுவனம், நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும் மற்றும் பண்பாட்டு வளர்ச்சிக்கும் ஏற்ற வழியில் இன்றியமையாததாகும்.

## TNPL

*—எதிர்ப்படும் பிரச்னைகளை இனிதாக நிறைவேற்றுகிறது.*



TNPL

தமிழ்நாடு செய்தித்தாள் மற்றும் காகித நிறுவனம் லிட்.,
காகிதபுரம்,
வேலாயுதம்பாளையம், அஞ்சல்
திருச்சி மாவட்டம்-639 117
இந்தியா.

DIPR 1978 TNPL 87-CHAAVA